4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

## சேக்அப்துல்லா வரவேற்பு

ஸ்ரீ நகர், ஜூலை 4—

இந்தியா பாகிஸ்தான் ஒப்பந்தம் குறித்து காஷ்மீர் தலைவர் சேக் அப்துல்லா கருத்தறிவிக்கையில் இது ஒரு நல்ல ஆரம்பம் என்றும் இந்த ஒப்பந்தத்தில் நல்ல அம்சங்கள் உள்ளன என்றும இன்னும் முக்கியமான பிரச்னைகளுக்குத் தீர்வுகாணப்படவில்லை என்றும், இருநாட்டுத் தலைவர்களும் முக்கியமான பிரச்சினைகளுக்குத் தீர்வுகாணும் விருப்பத்தையும் சக்தியையும் பெற்றுள்ளார்கள் என்பதை இது எடுத்துக் காட்டுகிறது என்றும் குறிப்பிட்டார்.

காஷ்மீர் மக்களின் கருத்தை கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், காஷ்மீர் பற்றி எந்த முடிவும் எடுக்க முடியாது என்று அவர் தெரிவித்தார்.


# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 5-7-72 புதன் (மலர் 157


## புதிய வெளியீடுகள்



| | |
|---|---|
| மாநில சுயாட்சி ஏன்? ஏ. பாலசுப்ரமண்யம் | 0 25 |
| கொரிய தொழிலாளர் கட்சி ஐந்தாவது காங்கிரசிற்கு மத்திய கமிட்டி சமர்ப்பித்த வேலை அறிக்கை கிம் இல் சிங் | 1 00 |

## விவசாயிகளுக்கு நிலம் கிடைக்கும் வழி எது?

# காங்கிரசை நம்பினல் விளைவு?

# மதுரைப் பேரணியில் இ. எம். எஸ். விளக்கம்

மதுரை, ஜூலை. 2—

அரசு யந்திரத்தை நம்பினல் நிலச் சட்டம் அமுலுக்கு வராது என்றும் விவசாயப் பெருங்குடி மக்களின் ஒன்றுபட்ட இயக்கத்தின் மூலமே நிலச் சட்டத்தை அமுலாக்க முடியும் என்றும் கேரள அனுபவம் விளக்குகிறது என்று தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் கூறினர்.



மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டின் இறுதி நாளன்று நடைபெற்ற 3 லட்சம் பேர் கொண்ட மாபெரும் பொதுக்கூட்டத்தில் தோழர் இ.எம்.எஸ் பேசினர். அப்போது அவர் குறிப்பிட்டதாவது :—

இக்கூட்டத்தில் கூடியிருக்கும் லட்சக்கணக்கான மக்களுக்கு கேரள மக்களின் நல்வாழ்த்துக்களை நான் கொண்டுவந்துள்ளேன்.

கேரளத்தில் சில மாதங்களாக தொடர்ச்சியான பல போராட்டங்கள் நடந்துள்ளன. தற்போது நடைபெற்று வரும் விவசாயத் தொழிலாளர் போராட்டம் பற்றி சில உண்மைகளைக் கூற விரும்புகிறேன்.

### நியாயமான போராட்டம்

விவசாயிகள் விவசாயத் தொழிலாளர்கள் மாநாட்டில் எழுப்பப்பட்ட கோரிக்கைகளின் அடிப்படையில் இந்தப் போராட்டம் நடைபெறுகிறது.

ஏழை, நடுத்தர விவசாயிகள், விவசாயத்தொழிலாளர்கள் வாழ்க்கை நிலைமையைப் பரிசீலித்து நியாயமான கூலி உற்பத்திப் பொருள்களுக்கு நியாய விலை முதலிய கோரிக்கைகளை முன்வைத்தும், நிலப்பிரபுக்களிடமுள்ள உபரி நிலத்தை வினியோகிக்க கோரும் பிரதான கோரிக்கையை முன் வைத்தும் இந்தப்போராட்டம் நடைபெறுகிறது.

உபரி நிலத்தை எடுத்து விவசாயிகளுக்கு வினியோகிக்கக் கோரும் கோரிக்கை அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்ததாக மாறியுள்ளது.

நிலச் சீர்திருத்தம் பற்றி இந்திரா காங்கிரஸ் அரசு வாய்கிழியப் பேசி வருகிறது.

ஆனல் இந்திர காங்கிரஸ் அதிகாரத்தில் பங்கு கொண்டிருக்கும் கேரளத்தில் 1969ல் இயற்றப்பட்ட நிலச் சீர்திருத்தசட்டத்தை அது அமுலாக்க மறுக்கிறது இந்தச் சட்டத்தில் விதிக்கப்பட்டிருக்கும் உச்ச வரம்பு அளவு

கேரளச் சட்டம் நிலஉச்ச வரம்பைப் பற்றிய கணக்கை நிலப்பிரபுக்கள் அரசாங்கத்துக்குத் தர வேண்டும் என்று விதிக்கிறது.

அவ்வாறு தரத்தவறுபவர்கள் மீது கோர்ட்டில் நடவடிக்கை எடுத்து சிறைத் தண்டனை விதிக்கவும் அந்தச் சட்டம் வகை செய்துள்ளது.

இந்தச் சட்டம் $2\frac{1}{2}$ ஆண்டுகளாக அமுலில் இருப்பதாக அரசு கூறிக்கொண்டாலும் கணக்கை கொடுக்காத ஒருநிலப் பிரபு மீது கூட அரசு வழக்குத் தொடுத்து சிறைக்கு அனுப்பவில்லை.

இந்நிலையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் இன்னும் இரண்டு இடதுசாரி கட்சிகளும், வெகுஜன ஸ்தாபனங்களும் நிலப்பிரபுக்களின் உபரி நிலத்தைக் கைப்பற்றி அரசாங்கத்திடம் ஒப்படைக்கும் போராட்டத்துக்கு அறைகூவல் விட்டன,

இந்தப் போராட்டம் வலதுசாரிகள் நடத்திய ஸ்டன்ட் போராட்டம் போன்றதல்ல.

### நிலப்பிரபுகளுக்கு சொந்தமல்ல

நிலப் பிரபுக்கள் வைத்திருக்கும் உபரிநிலம் அவர்களுக்குச் சொந்தமானதல்ல என்றும் அதை அவர்கள் வைத்துக்கொள்ள அனுமதிக்க மாட்டோம் என்றும் கூறி முதல்நாள், அன்று தோழர் ஏ. கே. கோபாலன் திருவாங்கூர் மகாராஜாவின் அரண்மனை நிலத்தில் பிரவேசித்தார்.

இதேபோல் கண்ணனூர் கோட்டயம் மாவட்டங்களில் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலம் வைத்துக்கொண்டிருக்கும் நிலப்பிரபுக்களின் நிலங்களும் பிடிக்கப்பட்டன.

அப்போது அச்சுத மேனன் அரசு செய்ததென்ன?

நிலச்சட்டம் $2\frac{1}{2}$ ஆண்டுகளாக அமுலில் இருப்பதாகக் கூறப்பட்டாலும் நிலப் பிரபுக்கள் அரசுக்குக் கொடுத்திருக்கும் கணக்கு 600 ஏககர்களுக்குமட்டுமே யாகும்.

இந்நிலையில் அனைத்து கட்சிகளையும் அழைத்து அரசாங்கம் நடத்திய கூட்டத்தில் 10 ஆயிரம் ஏக்கர் நிலமாவது எடுத்து விவசாயிகளுக்கு வினியோகிக்க முடியும் என்று அறிவிக்கப்பட்டது. இந்த வேலையை அதிகாரவர்க்கத்திடம் ஒப்படைத்தால் விவசாயிகளுக்கு எங்ஙனம் நிலம் கிடைக்கும்?

கேரளத்தில் கடந்த $2\frac{1}{2}$ ஆண்டு அனுபவம் விவசாயிகள் ஒன்று திரண்டு போராடாமல் விவசாயிகளுக்கு நிலம் கிடைக்காது என்பதே.

இவ்வாறு போராடியதற்காக 35 ஆயிரம் பேர்களை அச்சுதமேனன் அரசு சிறை பிடித்துள்ளது.

அவர்கள் செய்த குற்றமென்ன? சட்டப்படி கணக்குக் கொடுக்காத ஒரு நிலப் பிரபு மீதுகூட நடவடிக்கை எடுக்காத அரசு விவசாயிகள் மீது அடக்கு முறையை ஏவி விட்டுள்ளது,

### ஒன்றுபடுக!

ஏ. கே, கோபாலன் சட்டத்தை மீறவில்லை என்று அவர் மீது தொடுக்கப்பட்ட வழக்கில் மாஜிஸ்திரேட் தீர்ப்புக் கூறியுள்ளார். சட்டத்தை மீறியது போலீஸே என்றும மாஜிஸ்திரேட் கூறியுள்ளார்.

தமிழ் நாட்டிலும் சில மாதங்களாக உழைக்கும் மக்கள் போராட்டங்களை நடத்தி வருகிறார்கள். ஜூலை 12-ம் தேதியிலிருந்து விவசாயிகள் போராட்டம்தொடங்க இருக்கிறது எல்லா பகுதி மக்களும் ஒன்றுபட்டுப் போராடுவதின் மூலமே அரசின் மக்கள் விரோதக் கொள்கைகளை முறியடிக்க முடியும்.

## ஜூலை-12 முதல்

# இந்தியா முழுவதும் சிமெண்ட் ஆலைத் தொழிலாளர் போராட்டம்

## சி. ஐ. டி. யூ. பொதுச் செயலாளர் தோழர் பி. ராமமுர்த்தி அறிக்கை

மதுரை. ஜூலை. 2—

சி ஐ டி யூ வின் பொதுச் செயலாளர் தோழர் பி ராமமூர்த்தி பத்திரிகைகளுக்குக் கீழ்வரும் அறிக்கையினைவிடுத்துள்ளார் :-

ஊதிய உயர்வு, கிராக்கிப் படி உயர்வு, போனஸ் போன்ற கோரிக்கைகளை முன்வைத்து ஜூலை 2ம் தேதியிலிருந்து அகில இந்திய ரீதியில் வேலைநிறுத்தம் செய்ய சிமெண்ட் ஆலை தொழிலாளர்களின் தொழிற்சங்கங்கள் தீர்மானித்திருப்பதை இந்திய தொழிற்சங்க மையம் (சி ஐ டி யூ) முற்றாக ஆதரிக்கிறது. இந்த வேலை நிறுத்தம் நாடெங்கும் 30 ஆயிரம் தொழிலாளர்கள் வேலை செய்யும் 50-க்கு மேற்பட்ட சிமெண்ட் ஆலைகளில் நடைபெறக் கூடிய வேலை நிறுத்தமாக இருக்கும்

சமீபகாலத்தில்சிமெண்ட் ஆலை முதலாளிகளின்லாபம் பெருகியிருந்த போதிலும் தொழிலாளர்களுக்கு ரூ. 300 குறைந்த பட்ச தேவை அடிப்படைச் சம்பளத்தைக் கொடுக்க திட்டவட்டமாக மறுத்து வருகின்றனர். சிமெண்ட் ஆலைமுதலாளிகளின் பிடிவாதத்தின் காரமாக ஊதிய பேச்சு வார்த்தைமுடிவில்லாமல் இழுத்தடிக்கப்பட்டுள்ளது.

வேலை நிறுத்தத்துக்காக எழுப்பியிருக்கும் கோரிக்கைகள் மீது பேச்சு வார்த்தையின் போது சி. ஐ டி. யூ. சங்கங்களின் பிரதிநிதிகள் உறுதியான நிலை எடுத்தனர்

இதனல், முடிந்தால் மேற்கொண்டு பேச்சு வார்த்தையில் சி. ஐ. டி. யூ. பிரதிநிதியை விலக்கிவைக்க சில உடைமையாளர்கள் பகீரத முயற்சிகள் செய்து வருகின்றனர்.

இத்தகைய தந்திரோபாயங்களுக்கு ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி எச். எம். எஸ் தலைமைகள் உட்படாது என நான் நம்புகிறேன் எனினும் இத்தகைய முயற்சிகளை முறியடிக்குமாறு எல்லா தொழிற்சங்கங்களையும் சேர்ந்த தொழிலாளர்களை சி ஐ டி யூ அறைகூவி அழைக்கிறது

எந்த மையங்களுடனும் இணைக்கப்பட்டிருந்தாலும் எல்லா சிமெண்ட் ஆலைத் தொழிலாளர் சங்கங்களும் ஒன்றுபடுமாறும் வேலை நிறுத்தத்துக்கு ஒன்றுபட்ட தயாரிப்புச் செய்யுமாறும் சி ஐ டி யூ அறைகூவி அழைக்கிறது இந்த நடவடிக்கை மட்டுமே தொழிலாளர்களின் நியாயமான கோரிக்கையை ஏற்குமாறு சிமெண்ட் ஆலை முதலாளிகளை நிர்ப்பந்திக்கும்.

சிமெண்ட் ஆலைத் தொழிலாளர்களின் போராட்டம் வெற்றியடையும் முறையில் அவர்களுக்கு ஆதரவாக இந்தியாவின் எல்லாத் தொழிலாளர்களும் அணிதிரளுமாறும் சி ஐ டி யூ அறைகூவி அழைக்கிறது.

## 9-வது மாநாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி

# அரசியல் தலைமைக் குழு உறுப்பினர்கள்.

| | |
|---|---|
| பி. சுந்தரய்யா | (பொதுச் செயலாளர்.) |
| பி. டி. ரணதிவே | இ. எம். எஸ். நம்பூதிரிபாட் |
| பி. ராமமூர்த்தி | ஜோதிபாசு |
| புரமோத்தாஸ்குப்தா | பசவபுன்னையா |
| ஏ. கே. கோபாலன் | அரிகிஷன்சிங் சுர்ஜித் |

தேர்ந்தெடுக்கப்பட்ட மத்தியக்குழு உறுப்பினர்கள் :

பஞ்சாப் :

அரிகிஷண்சிங் சுர்ஜித் சத்வந்த்சிங்

ராஜஸ்தான் ; மோகன்புனமியா

மகராஷ்டிரா :

பி. டி. ரணதிவே கோதாவரிபருலேகர்
எஸ். ஒய். கோல்ஹட்கர்

கேரளா :

இ. எம். எஸ். நம்பூதிரிபாட் ஏ. கே. கோபாலன்
சி. எச், கணரன் இ. கே. நயினர்
இ. பாலானந்தன்.

தமிழ்நாடு :

பி. ராமமூர்த்தி எம். ஆர். வெங்கட்ராமன்
ஏ. பாலசுப்ரமண்யம்

ஆந்திரா :

பி. சுந்தரய்யா எம். பசவபுன்னையா
எம். அனுமந்தராவ் என். பிரசாதராவ்

மேற்கு வங்கம் :

முசாபர் அகமது ஜோதிபாசு
புரமோத்தாஸ் குப்தா சமர்முகர்ஜி
அரிகிருஷ்ணகோனர் கிருஷ்ணபாதகோஷ்

அசாம் :

அசிந்தியபட்டாச்சார்யா.

திரிபுரா :

தசரதேவ் நிருபன் சக்ரவர்த்தி

உ. பி: சங்கர் தயாள் திவாரி

பீஹார் : ஸ்ரீவத்ஸவா.

மத்தியகமிட்டிஅலுவலகம் தேஸ்ராஜ் சதா, ராம்தாஸ்

## மகத்தான மதுரைமாநாடுபற்றி நாளேடுகள்

### பிரமாண்டமானது - "இந்தியன் எகஸ்பிரஸ்",

"மார்க்சிஸ்ட் கட்சி தனது9வது மாநாட்டைச் சிறப்பிக்கும் வகையில், மாநாட்டின் கடைசி நாளான ஞாயிறன்று பிரும்மாண்டமான 3மைல் நீள ஊர்வலம் நடத்தியது.

மிகச்சிறப்பாக நடந்த அந்த ஊர்வலத்தின் ஒரு முக்கிய அம்சம் என்னவென்றால் மற்ற கட்சிகளின் ஊர்வலங்களைப்போல் அதிகமானேர் பஸ், லாரிகளில் உட்கார்ந்து கொண்டுவராமல் பல்லாயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் ஊர்வலம் முழுவதிலும் நடந்து வந்ததுதான்.

ஊர்வலத்தினர் மார்க்சிஸ்ட் கட்சியை வாழ்த்தியும், பிரதம மந்திரி இந்திரா காந்தியையும் அவரது கொள்கையும்கண்டித்தும் கோஷங்களை முழங்கினர்.

செங்கொடிகளாலும், தலைவர்களின் படங்களாலும் அலங்கரிக்கப்பட்ட நூற்றுக்கணக்கான லாரிகள், பஸ்கள், சைக்கிள்கள், ரிக்ஷாக்கள் ஊர்வலத்தின் கடைசியில் அணிவகுத்து வந்தன. ஊர்வலம் ஒருமுனையைக் கடப்பதற்கு சுமார் 100 நிடங்கள் பிடித்தன.

கிராமிய நடனங்களும், மத்திய அரசின் கொள்கைகளை கண்டிக்கும் கேலிச் சித்திரங்களையும்கொண்ட டிரக்குகளும் ஊர்லத்தில் சென்றன.

ஓராயிரம் செந்தொண்டர்கள் அணிவகுத்து முன்செல்ல மார்க்சிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் சுந்தரய்யா, மற்றும் பி.ராமமூர்த்தி, ஏ.கே. கோபாலன், இ. எம். எஸ், நம்பூதிரிபாட், ஜோதிபாசு, அரிகிஷன் சிங் சுர்ஜித், பி. டி. ரணதிவே ஆகிய தலைவர்கள் திறந்த லாரியில் அழைத்துச் செல்லப்பட்டனர்.

அரசரடியில் ஆரம்பித்த அந்த ஊர்வலம், நகரின் பல முக்கிய வீதிகளின் வழியாக சுமார் 8மைல் தூரம் சென்று ரேஸ்கோர்ஸ் மைதானத்தை அடைய 5மணிநேரம் பிடித்தது.

3—7—72

### சிகப்புப் படையெடுப்பு "டைம்ஸ் ஆப் இந்தியா" வருணனை

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஜூலை 2-ம் நாள் ஊர்வலம் குறித்து பம்பாயிலிருந்து வெளிவரும் "டைம்ஸ் ஆப இந்தியா" எனும் ஆங்கில நாளேடு கீழ் வருமாறு எழுதுகிறது;—

"மதுரை மாநகரமே அரிவாள் சுத்தியல் சின்னங்களால் மூழ்கி விட்டது. பற்பல வரவேற்பு வளைவுகளும், அரிவாள் சுத்தியல் சின்னங்களும் நகரம் முழுவதும் காட்சியளித்தன. மார்க்சிஸ்ட் ஆதரவாளர்கள் தமிழகத்திலிருந்தும் அருகிலுள்ள கேரளத்திலிருந்தும் மதுரை மாநகரத்திற்குள் காலையிலிருந்தேவெள்ளம் போல் குவிந்தனர். 300 லாரிகளுக்கு மேல் வந்திருந்தன.

யாத்திரீகர்கள் ஸ்தலமான மதுரைமாநகரத்தில் செம்படை படையெடுத்ததைப் போன்றிருந்தது,

இன்று நடைபெற்ற பிரம்மாண்டமான ஊர்வலம் ஒரு இடத்தைக் கடக்க 2 மணிநேரம் பிடித்தது. 1965ம் ஆண்டில் தி மு. க. ஊர்வலத்திற்குப் பின் இந்த ஊர்வலம்தான் பிருமாண்டமான ஊர்வலம் என எல்லோராலும் கருதப்படுகிறது"

3—7—72

தீக்கதிர்

# மதுரை மாநகரம் காணாத காட்சி

மதுரை நகரில் ஜூலை 2-ம் தேதி மகத்தான ஊர்வலம் ஒன்று நடைபெற்றிருக்கிறது.

மதுரையிலும், மற்ற நகரங்களிலும் இதுவரை மற்ற கட்சிகள் எத்தனையோ ஊர்வலங்களை நடத்தியுள்ளன.

ஆனால் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டின் கடைசி நாளன்று நடைபெற்ற இந்தஊர்வலம் தமிழ் நாட்டு மக்களின் வளர்ந்து வரும் சக்தியைப் பிரதிபலிக்கும் ஊர்வமாக அமைந்து வரலாற்றில் தனிச் சிறப்பிடம் பெற்றுள்ளது.

எழுச்சிமிக்க ஊர்வலம் இது என்றும் மற்ற கட்சி ஊர்வலங்களைப் போலன்றி இந்த ஊர்வலத்தில் வந்தவர்கள் லாரிகளிலோ பஸ்களிலோ ஏறிக்கொண்டுவராமல் நடந்தே வந்தார்கள் என்றும் மாற்று கட்சிப் பத்திரிகைகள் குறிப்பிட்டுள்ளன.

அரசரடியிலிருந்து ரேஸ்கோர்ஸ் மைதானம் வரை 2 லட்சம்பேர் கலந்து கொண்ட ஊர்வலத்தில் இருந்த ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் இதற்குமுன் வேறெந்த கட்சியின் ஊர்வலத்திலும் யாரும் காணமுடியவில்லை.

தமிழக மக்களிடம் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எவ்வாறு வேரூன்றி வளர்ந்து வருகிறது என்பதை மாநிலத்தின் மூலைமுடுக்குகளிருந்து குடும்பம் குடும்பமாக சகலபகுதி மக்களும் வந்து இந்த ஊர்வலத்தில் கலந்து கொண்டதும் ஆர்வத்துடன் கோஷங்கள் முழங்கியதும் எடுத்துக் காட்டின.

ஆயிரக்கணக்கான செந்தொண்டர்களும், தொழிலாளர்களும், விவசாயிகளும் ஊர்வலத்தின் முகப்பில் கம்பீரமாக முழக்கமிட்டு நடந்துசென்ற கட்சி அவர்களுடைய கொள்கை உறுதிப்பாட்டை எடுத்துக் காட்டியுள்ளது.

ஆண்கள் [illegible]மின்றி போட்டி போட்டுக்கொண்டு தாய்மார்களும், குழந்தைகளும் செந்நிற ஆடைகளை அணிந்துகொண்டும் செங்கொடிகள் ஏந்திக்கொண்டும் இவ்வளவு எண்ணிக்கையில் திரண்டுவந்ததைப்போல் வேறெப்போதும் வந்ததில்லை.

ஊர்வலத்தில் எழுப்பப்பட்ட கோஷங்கள் இதில் கலந்துகொண்ட மக்களின் பக்குவத்தை எடுத்துக் காட்டின.

இந்திராகாந்தியின் ஒரு கட்சி சர்வாதிகாரப் போக்கை எதிர்த்து ஊர்வலத்தினர் எழுப்பிய இடி முழக்கம் மார்க்சிஸ்ட் கட்சி அழிக்கமுடியாதொரு சக்தி என்பதைப் புலப்படுத்திற்று.

மத்திய சர்க்காரின் மக்கள் விரோதக் கொள்கைகளையும் பித்தலாட்டங்களையும் எதிர்த்தும் தி. மு. க. அரசாங்கத்தின் அடக்குமுறையை எதிர்த்தும் எழுந்த கோஷங்கள் மதுரை நகரம் முழுவதும் எதிரொலித்தன.

நாட்டில் ஒரு கட்சி சர்வாதிகாரத்தை அமைக்கும் இந்திரா காங்கிரசை பிரதானமாகக் குறி வைத்து எதிர்த்தும் பிற்போக்கு சக்திகளை எதிர்த்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிமுன் வைத்துள்ள அரசியல் நிலைக்குக் கிடைத்திருக்கும்வெற்றியை இந்த ஊர்வலம் பிரதிபலித்துள்ளது.

இண்டிகேட்டையும் சிண்டிகேட்டையும் எதிர்க்கும் அரசியல் நிலைக்கு மேற்கு வங்கத்திலும் கேரளத்திலும் வெற்றி கிட்டியதைத் தொடர்ந்து தமிழ் நாட்டிலும் இந்த நிலைக்கு மக்கள் ஆதரவு பெருகி வருவதை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் இயக்கங்களில் பல்லாயிரக் கணக்கான மக்கள் திரண்டு வருவது நிரூபித்து வருகிறது.

காங்கிரஸ் கொள்கைகளுக்கு மாற்றுக்கொள்கைகளை முன்வைத்து போராடும் மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட்கட்சிதான் தமிழ்நாட்டில் வளர்ந்து வரும் சக்தி என்பதை மதுரைப் பேரணி எடுத்துக்காட்டியுள்ளது.

### தி. மு. க. வன்முறை தொடர்கிறது

# தொழிற்சங்க ஊழியர் தாக்கப்பட்டார்

சென்னை, ஜூலை. 2— மாதவரம் கடைவீதி வழியில் கடந்த ஜூலை 1-ம்தேதி மாதவரம் பண்ணை தொழிற் சங்க துணைத் தலைவர் இளவழகனும், ராபர்ட்டும் தங்கள் வீட்டுக்குப் போய்க் கொண்டிருந்தபோது தாக்கப்பட்டனர். தி. மு. க. வைச் சேர்ந்த, அன்பு, தேவன் ஆகிய இருவரும் வழிமறித்தனர். இளவழனின் வலதுபுறக்கன்னத்தில் அன்பு என்பான் கத்தியால் குத்தி படுகாயப்படுத்தி விட்டு தன் கூட்டாளியுடன் ஓடிவிட்டான்.

இளவழகன், சென்னை ஸ்டான்லி மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளார்.

இதுவரையில் போலீஸ் யாரையும் கைது செய்யவில்லை.

# "ஒருகட்சி சர்வாதிகாரத்தை முறியடிப்போம்"

# ஜனநாயக கட்சிகளுக்கு ஜோதிபாசு அழைப்பு

மதுரை, ஜூன். 3— மதுரையில் ஜூலை 2-ம் நாள் கூட்டத்தில் தோழர் ஜோதிபாசு பேசியது பின் வருமாறு:—

மேற்கு வங்கத்தில் 2 தடவை ஐக்கிய முன்னணி அரசு ஏற்பட்டபோது, முதல் தடவையாக உழைப்பாளி மக்களுக்கு ஆதரவாக நிற்கக்கூடிய ஓர் அரசு ஏற்பட்டது உழைப்பாளி மக்களை அடிக்காத அரசு வந்தது. அதனால் தொழிலாளர்களும் விவசாயிகளும் மாபெரும் வெற்றிகளை அடைந்தார்கள்.

அதனால் பாதிக்கப்பட்ட உடைமை வர்க்கங்களும் அதன் காங்கிரஸ் அரசும் ஒரு முடிவுக்கு வந்தது.

எப்படியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஐக்கியமுன்னணியைஆட்சிக்கு வரவிடக்கூடாது என்று முடிவுக்கு வந்தனர். நல்ல வழியில் தடுக்க முடியாததால், தீயவழியில் வரவிடாதபடிச் செய்ய முன் வந்தார்கள். அதன்படி நமது கட்சியின் 650 தோழர்களைப் படுகொலை செய்தார்கள். இதெல்லாம் டில்லியிலிருந்தே, திட்டமிடப்பட்டன. 1 லட்சம் பேர்களைக் கைது செய்ய உத்தரவிட்டனர்! கைது செய்யப்பட்ட 600 தோழர்களை தமிழ்நாடு சிறைக்கு மாற்றினார்கள். இத்தனையும் செய்துவிட்டு இந்த ஆண்டில் தேர்தல் வைத்தார்கள்.

ஜனநாயக முறையில் தேர்தல்வைத்தால், மேற்கு வங்க மக்கள் இந்திரா காங்கிரசுக்கு முழுக்க முழுக்க மண்ணடித்து விடுவார்கள் என்று தெரிந்து — சுமார் 250 தொகுதிகளில் மோசடித் தேர்தல் நடத்த திட்டமிட்டனர். இந்திரா காங்கிரசின் குண்டர்கள் வாக்குச் சாவடிகளுக்குள் புகுந்து, ஓட்டுச் சீட்டுகளை பறித்து இஷ்டப்படி, சீல்போட்டுக் கொண்டு அப்படியே வாக்குப் பெட்டியில் போட்டுக் கொண்டார்கள்வாக்களிக்க வாக்காளர்களுக்கு போலீஸ் அதிகாரிகள் பாதுகாப்பு அளிக்கவில்லை.

வாக்குப் பதிவு எப்படி நடந்தது? இந்தியாவின் மற்ற மாநிலங்களில் போல் அல்லாமல் — பத்தாயிரக் கணக்கான வாக்குகளில், 39 ஆயிரம், 44 ஆயிரம் 50 ஆயிரம், 70 ஆயிரம் வாக்கு வித்தியாசங்களில் மார்க்சிஸ்டுகள் தோற்று விட்டார்கள் என்பதாக அறிவித்தார்கள்.

250 தொகுதிகளில் 150 தொகுதிகள்வரை வாக்குப் பெட்டிகளையே மாற்றிவிட்டார்கள்.

இப்படிப்பட்ட ஒரு தேர்தலை நமது நாட்டின் தேர்தல் வரலாற்றில் பார்த்திருக்கிறீர்களா?

நாடாளுமன்ற ஜனநாயக முறையை மேற்கு வங்கத்தில் அடித்து நொறுக்கியிருக்கிறார்கள்.

மேற்கு வங்கத்தில் இனிமேல் நடைபெறும் தேர்தல்களெல்லாம் இப்படித்தான் இருக்கும். மேற்கு வங்க மக்களுடன் தமிழ் நாடு மக்களும் இதரமாநில மக்களும் சேர்ந்து போராடினால்தான் ஜனநாயகத் தேர்தலை நடத்தமுடியும்.

### காங்கிரசாரே வெட்கப்பட்டனர்

இந்திரா காங்கிரஸ் வெற்றிபெற்ற பிறகு-அதன் வெற்றி ஊர்வலங்கள் எப்படி நடந்தன. அந்த ஊர்வலங்களுக்கு ஆட்களே சேரவில்லை. தேர்தல் லட்சணமும் வெற்றி பெற்ற லட்சணமும் எப்படிப்பட்டது என்பதை காங்கிரஸ் காரர்களே அறிந்திருந்ததால், அவர்களே வெட்கப்பட்டு, அவர்களும் வெற்றி ஊர்வலத்தில் கலந்து கொள்ளவில்லை.

இப்படி வெற்றி பெற்றவர்களின் கூட்டங்களுக்கு ஆள் சேரவில்லை.

அதே சமயத்தில் தோற்கடிக்கப்பட்ட நமது கூட்டங்களுக்கோ பல்லாயிரக் கணக்கில் சேருகிறார்கள்.

உதாரணமாக சி ஐ. டி யூ. வும் நடத்திய கூட்டத்தில் 1 லட்சத்திற்கு மேற்பட்ட மக்கள் வந்தார்கள்.

அவர்கள் நடத்திய கூட்டத்தில் — முதலமைச்சர் சித்தார்த்த சங்கர்ரே பேசிய கூட்டத்தில், வெறும் 3500 பேர் தான் கலந்துகொண்டார்கள்.

இந்திரா காங்கிரஸ் அக்கிரமமான முறையில் ஆட்சிக்கு வந்த பிறகும் கொலை பாதகச் செயல்கள் நிற்கவில்லை. ஆட்சிக்கு வந்த பிறகு, நாளதுவரை 60 தோழர்கள் கொல்லப்பட்டிருக்கிறார்கள்.

இந்திரா காங்கிரஸ் குண்டர்கள் தொழிலாளர் குடியிருப்புகளில் சென்று துப்பாக்கிகளைக் காட்டி, வீட்டைவிட்டே விரட்டி விடுகிறார்கள்.

### கேள்வி எழும்

மார்க்சிஸ்ட் கட்சி இவ்வளவு பலமாகஇருக்கக்கூடிய மேற்கு வங்கத்திலே, இந்த குண்டர்களையும் சமூக விரோதிகளையும், காங்கிரசிடம் சரணடைந்த நக்சல் பாரிகளையும் எதிர்த்துநிற்க முடியாதா? என்று கேள்வி கேட்கலாம்.

அந்தக் குண்டர்களுக்குப் பின்பலமாக போலீசும் இராணுவமும் வராமலிருந்தால்—எங்கள் கட்சிக்கு அந்த குண்டர்களை அடக்க 24 மணி நேரமே போதும் 24 மணிநேரத்தில் அவர்களை அடக்கிவிடக் கூடிய சக்தி நமக்கு உண்டு.

அந்தக்குண்டர்கள் தனியாக வந்து தாக்கவில்லை. போலீசாரும் மத்திய அரசும் திட்டமிட்டுத்தான் இந்தத்தாக்குதல் நடத்துகிறார்கள். குண்டர்கள் மீது போலீஸில் புகார் கொடுத்தால் அந்தப்புகாரை எடுக்கக்கூடாது என்று மத்திய அரசு, மாநிலப் போலீசுக்கு உத்தரவிட்டுள்ளது.

முதலாளித்துவப் பத்திரிக்கைகளும் இந்த தாக்குதல்களை கொலை வெறிச் செயல்களை பிரசுரிப்பதில்லை. நாம் ஐ. மு அரசு நடத்திய போது சிறு சம்பவங்களையெல்லாம் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்த பத்திரிகைகள் இப்பொழுது நமது தோழர்கள் கொல்லப்பட்டாலுங்கூட நமது பெண்களைக்கற்பழித்தாலும் கூட அதையெல்லாம் பிரசுரிப்பதில்லை.

இப்படிப்பட்ட சூழ்நிலையில் தான், தொழிலாளர் வர்க்கம் தங்கள் போராட்டங்களை நடத்த வேண்டியிருக்கிறது.

### பெண்களும் படுகொலை

கொல்லப்பட்ட 650 பேர்களில் 11 பெண்களும் இருக்கிறார்கள் என்பதை மறக்க வேண்டாம். பல்லாயிரக்கணக்கான பேர் மீது பொய்க்கேசுகள் போட்டிருக்கிறார்கள்.

### பணிய மாட்டோம்

இவ்வளவு கொடுமை செய்திருந்தாலும் — இன்னும் எவ்வளவு கொடுமை புரிந்தாலும், எங்கள் மக்களை இந்திரா சர்க்காரால் ஒருக்காலும் பணியவைத்து விடமுடியாது. எங்களை அடக்கி ஒடுக்கிடமுடியாது. ஏனென்றால்நாங்கள்கோடிக் கணக்கான தொழிலாளி விவசாயிகளின் நலன்களுக்காகவே நிற்கிறோம். அப்படிப்பட்ட மக்களை அடக்கி விடக்கூடிய சக்தி இந்திராவுக்கும் கிடையாது. வேறு யாருக்கும்கிடையாது.

### எச்சரிக்கை

மக்களை அடக்கி ஒடுக்கி விட முடியாது என்பது மெய்யானாலும், தற்காலிகமாவது மேற்குவங்க மக்கள் அடக்கப்படுவார்களேயானால், அதனால் தெம்பு அடைந்ததமிழ்நாடுஉட்பட சகல மாநிலங்களிலும் ஒரு கட்சி சர்வாதிகாரம் ஏற்பட்டு, ஜனநாயகம் குழி தோண்டிப் புதைக்கப்படும். இதை மனதிற்கொண்டு சகல ஜனநாயக சக்திகளும், இடதுசாரி சக்திகளும் ஒன்றுபட்டு முன்னேறுவோம்.

இந்த ஒற்றுமையை நாம் சாதித்தே தீருவோம். நாம் நம்பிக்கையுடன் தைரியசாக முன்னேறுவோம்.

மார்க்சிஸ்ட் கட்சியின் 9-வது மாநாட்டை வெற்றிகரமாக நடத்திக்கொடுத்த உங்கள் அனைவருக்கும் நன்றி கூறுகிறேன்—என்று கூறி முடித்தார்.

தோழர் ஆர். உமாநாத், தோழர் ஜோதிபாசுவின் பேச்சை அருமையாக தமிழில் மொழி பெயர்த்தார்.

## ஆசிரியருக்கு...

### விவசாயிகளிடம் கெடுபிடி

ஐயா,

மதுரை மாவட்டம் பழனி தாலுகா போடுவார்பட்டி மிகவும் பின் தங்கிய பகுதியாகும். இங்கு விளைச்சல் சரியில்லாமலும், உரிய காலத்தில் மழையில்லாமலும் விவசாயம் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. பருத்தி விலையில்லாமல் பருத்தி விற்க முடியாத நிலையில் விவசாயிகள் பலர் உள்ளனர். இந்நிலையில் விவசாய கடன் சங்கத்திற்குக் கட்ட வேண்டிய கடன்களை வசூலிப்பதற்காக வெளியூரிலிருந்து சில அதிகாரிகள் வந்துள்ளனர்.

இவர்கள் பாரபட்சமாக விவசாயிகளிடம் ஆடு மாடுகளைப் பிடிப்பதுடன், பண்ட பாத்திரங்களை வீடுகளில் புகுந்து எடுத்து வருகிறார்கள். பூட்டியுள்ள வீட்டில் பூட்டைகூட உடைக்க முற்படுகிறார்கள். பணம் கட்டிய விவசாயிகளிடம் கூட ஆடுமாடுகளைப் பிடிக்கின்றார்கள். இவர்கள் அனைவரும் பிராந்தியும், சாராயமும் குடித்துவிட்டுத்தான் இத்தனை கொடுமைகளையும் செய்கிறார்கள்: விவசாயிகளிடம் மிகவும் தரக் குறைவாக நடந்து கொள்கிறார்கள்.

விவசாயிகள் வாழ்க்கை நடத்துவதற்கே மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். பருத்தி, சோளம் முதலிய பொருள்களை நீங்களே வைத்துக் கொண்டு நியாய விலை கொடுங்கள் என்று கேட்டால் பருத்தி, சோளத்திற்குப் பாதி விலை போட்டுத்தான் பில் போடுகிறார்கள். ஏழை விவசாயிகளை வாழவைப்பதுதான் எங்கள் லட்சியம் என்றும் விவசாயிகளை வாழ வைக்க கடன் சட்டம் கொண்டு வருவேன் என்றும், கூறிக் கொள்ளும் தி. மு. க. அரசு ஏழை, எளிய விவசாயிகளின் மானம் பறிக்கப் படுவதையும், நிர்வாகத் தலைவருக்கு வேண்டாதோர் மீது நடவடிக்கை எடுக்கப்படுவதையும் உடனே நிறுத்தி வைக்க வழிவகை செய்ய வேண்டாமா? ஏழை எளிய விவசாயிகளுக்கு மனுநீதி வழங்குவோர் என்று கூறும் தி. மு. க. அரசின் நீதி இதுதானா? அதிகாரிகளின் போக்கால் விவசாயிகள் ஆத்திரம் அடைந்துள்ளார்கள். உண்மையில் நீதி வழங்கும் அரசாயிருந்தால், உடனடியாய் சம்பந்தப்பட்ட அதிகாரிகள்மீது நடவடிக்கை எடுப்பதுடன் கெடுபிடி வசூலை நிறுத்த முன் வருமா?

இவண்,

பி. கே. கடவுள்,
போடுவார்பட்டி,
பழனி வட்டம்.

# மார்க்சிஸ்ட் கட்சியின் எழுச்சிமிகு ஊர்வலம்

## மற்ற நாளேடுகளின் கருத்து

மதுரை, ஜூலை. 3—

மதுரையில் எழுச்சிமிக்க-பிரமாண்டமான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஊர்வலம் நடைபெற்றதைப்பற்றி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சாராத தமிழ், ஆங்கில நாளேடுகள் வியந்து பாராட்டி செய்திகள் வெளியிட்டுள்ளன. அந்த ஏடுகளின் செய்தியின் முக்கிய பகுதிகளை கீழே பிரசுரம் செய்துள்ளோம்.

### "தினமலர்"

"பிரமாண்டமானதாக இருந்த (மார்க்சிஸ்ட்) ஊர்வலம் ஒரு இடத்தைக் கடந்து செல்வதற்கு ஒன்றரை மணி நேரத்திற்கும் கூடுதல் ஆகியது.

மதுரை நகரம் இதுவரை காணாத அளவுக்கு பல்லாயிரக்கணக்கான வர்கள் ஈசல்போல் திரண்டு வந்து இந்த ஊர்வலத்தில் கலந்துகொண்டார்கள். இவ்வளவு பெரிய ஊர்வலத்திற்கு எங்கிருந்துதான் வந்தார்களோ என்று நினைக்கும்படியாக ஊர்வலம் இருந்தது."

ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்களின் எண்ணிக்கை சுமார் 1 லட்சம் இருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது.

### ஊர்வலத்தில் யானை

ஊர்வலத்திற்கு முன்பு செங்கொடி ஏந்திய வீரர்கள் அணிவகுத்து சென்றார்கள். இதற்குப் பின்னால் யானை ஒன்றின் மீது பெரிய செங்கொடி எடுத்துவரப்பட்டது. இதையடுத்து பெரிய அரிவாள், சுத்தியல் சின்னத்தை ஒரு வண்டியில் வைத்துக்கொண்டு வந்தார்கள். அதற்குப் பின்னால் அரிகிருஷ்ண கோனார், சுர்ஜித்சிங் ஆகிய இடது கம்யூனிஸ்ட் தலைவர்கள் நடந்து சென்றார்கள்.

ஊர்வலத்தில் கார்ல் மார்க்ஸ், ஏ.கே. கோபாலன், நம்பூதிரிபாடு, ஜோதிபாசு, பி. ராமமூர்த்தி, பி டி. ரணதிவே ஆகியவர்களின் உருவப் படங்கள் எடுத்துச் செல்லப்பட்டன.

### சிலம்ப ஆட்டம்

ஊர்வலத்திற்கு முன்னால் செங்கொடி வீரர்கள் சிலம்ப ஆட்டம் ஆடிக்கொண்டு போனது புதுமையாக இருந்தது.

கரக ஆட்டங்கள், பொய்க்கால் குதிரை ஆட்டங்கள் முதலிய கிராமிய கலை நிகழ்ச்சிகளுடன் ஊர்வலம் ஏகதடபுடலாக காணப்பட்டது குறிப்பிடத்தக்கதாகும். 1000க்கு மேற்பட்ட செந்தொண்டர்கள் ஊர்வலத்தில் அணிவகுத்து சென்றார்கள். இவர்கள் அனைவரும் தலையில் சிவப்பு தொப்பி அணிந்து சிவப்பு சட்டை அணிந்து வெள்ளை கால் சட்டை அணிந்து இருந்தனர்.

### கோஷங்கள்

ஊர்வலத்தில் சென்றவர்கள் நிக்சன் ஒழிக, வியட்நாமைவிட்டு வெளியேறு, இந்திராஒழிக என்பது போன்ற கோஷங்களை முழங்கியவாறு சென்றார்கள். இந்திரா காந்தி கோரத்தாண்டவம் ஆடுவது போன்று பொம்மை ஒன்றை ஒரு வண்டியில் எடுத்துச் சென்றார்கள்.

### இ. க. தலைவர்கள்

இதற்குப் பின்னால் ஒரு லாரியில் இடது கம்யூ. தலைவர்களான ஏ. கே. கோபாலன், பி ராமமூர்த்தி, ஜோதிபாசு, நம்பூதிரிபாடு, சுந்தரய்யா, பி. டி. ரணதிவே முதலிய தலைவர்கள் நின்று கொண்டே ஊர்வலத்தில் சென்றார்கள்.

ஊர்வலத்தில் நூற்றுக்கணக்கான சைக்கிள் ரிக்ஷாக்கள் ஒன்றுபோல அணிவகுத்துச் சென்றன. இவற்றில் செங்கொடிகள் கட்டப்பட்டு தலைவர்களின் படங்கள் எடுத்துச் செல்லப்பட்டன.

### மாட்டு வண்டிகள்

இதற்கெல்லாம் மேலாக நூற்றுக்கணக்கான மாட்டுவண்டிகள் ஊர்வலத்தில் கலந்துகொண்டது வேடிக்கையாக இருந்தது. எல்லோர் கண்களும் இந்த மாட்டு வண்டிகள் மீது தான் இருந்தன. சாலையின் இரு மருங்கிலும் நின்ற ஆயிரக்கணக்கானவர்கள் இந்த மாட்டு வண்டிகளை பார்ப்பதில் தனி ஆர்வம் காட்டினர்.

### வண்டிக்கு மேலே

'ஜல் ஜல்' என்ற ஓசை கிளப்பி அணிவகுத்துவந்த இந்த மாட்டு வண்டிகளில் எல்லாம் சிவப்பு சேலை கட்டி சிவப்பு ஜாக்கட் போட்டிருந்த பெண்கள் அமர்ந்திருந்தார்

(3-ம் பக்கம் பார்க்க)

# ரூபிள் நாணயம் மதிப்பு உயர்வு

மதுரை, ஜூலை. 3—

சோவியத்யூனியன்நாட்டு நாணயமான ரூபிளின் மதிப்பு உயர்த்தப்பட்டுள்ளது

இதுவரை பிரிட்டிஷ் நாணயமான பவுன் ஒன்றுக்கு 2 ரூபிள் 15 கோபக்குகள் அளிக்கப்பட்டுவந்தது இனிமேல் ஒரு பவுனுக்கு 2-03 ரூபிள்கள் தான் அளிக்கப்படும்.

## வியட்நாமைப் பாடுவீர்!

# புனையட்டும் செந்தேனீ, புதிய கீதம்!

-: ந. பாண்டுரங்கன் :-

பொங்குகின்ற கடலலையாய் வியட்நாம் மக்கள்
போராடிப் புதுயுகத்தைப் பாடு கின்றார்!

அங்கமெலாம் வெந்தாலும் அஞ்சா நெஞ்சை
அவனியிலே வாழ்த்தாத வாயே இல்லை

தங்கநிகர்ப் பூமியிலே நாபாம் வீசித்
தாக்குகின்ற நிக்சனவன் தருக்கைக் கண்டும்

வெங்கொடுமைச் சாக்காட்டில் போராடும் நாடே!
வீரத்தில் இணையில்லா வியத்நாமின் தாயே!

மேகாங்கின் கரையில் அமெரிக்கர் கூட்டம்
வெருண்டோடி நாடோறும் எடுக்கும் ஓட்டம்

சாகாத மொழியினிலே சரிதம் பாடும்
சரித்திரமே! ஹோசிமினின் இனமே வாழி!

வீரம் மாளாத விடுதலை சேனை
பறைகொட்டிப் போரிடவும் ஓடுதடா நிக்சன்பூனை

ஏகாதி பத்தியத்தை எதிர்த்துப் போராடும்
செந்நிலமே! உலகெல்லாம் உன்னைப் பாடும்

திக்கெங்கள் சிவக்கட்டும்! உனது தேசத்தை
தின்பவரின் திமிர்வாதம் தீய்ந்தி டட்டும்!

பூக்கட்டும் உன்மடியில் புரட்சி ரோஜா,
புனையட்டும் செந்தேனீ புதிய கீதம்!

மூர்க்கர்குலம் உனையழிக்கத் திரண்ட போதும்
முழுமூச்சாய்ப் போராடுகிறாய் — புனிதநாடே!

ஆர்க்கட்டும் உன்ராகம்- அகில மெல்லாம்
அயராமற் போராடுகிறாய்-! வெற்றிஉனதே!

## நாடு முழுவதிலும்

# ரிசர்வ் பாங்கு ஊழியர் போராட்டம் வெற்றி

பம்பாய், ஜூன். 29—

பம்பாயிலும், நாட்டின் பிற பகுதியிலுமுள்ள ரிசர்வ் பாங்கைச் சேர்ந்த சுமார் 18,000 பேர் இன்று ஒருநாள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர். பம்பாய் ரிசர்வ் பாங்கு ஊழியர்கள், கடந்த 13 தினங்களாக செய்து வரும் ஸ்டிரைக்கிற்கு ஆதரவாக இன்று இந்த ஸ்டிரைக் நடந்தது. இதனால் பாங்கில் வேலை ஸ்தம்பித்தது.

நாட்டின் முக்கிய நகர்களிலுள்ள 19 ரிசர்வ் பாங்கு அலுவலகங்களைச் சேர்ந்தவர்களும் ஸ்டிரைக்கில் ஈடுபட்டதால் பாங்கின் நடவடிக்கைகள் பாதிக்கப்பட்டன.

பம்பாயில் 4-ம் பிரிவு ஊழியர்களும் ஸ்டிரைக்கில் கலந்து கொண்டனர். நாட்டிலுள்ள பிற கிளைகளில் அவர்கள் 90 நிமிடங்கள் ஸ்டிரைக் செய்தனர்.

பம்பாயில் மகாராஷ்டிரா ஸ்டேட் பாங்க் ஊழியர் சம்மேளனம், மேற்பார்வை ஊழியர் சங்கம் ஆகியவை, ஸ்டிரைக் செய்துவரும் ஊழியர்களுக்கு ஆதரவு தெரிவிக்கின்றன.

சம்மேளன பொதுக் காரியதரிசி திரு, எச். எல். பர்வானா, பாங்கினுள் நடந்த ஊழியர் கூட்டத்தில் கூறினார்.

இன்று பாங்கு முடியும் வரை ஊழியர்கள், மானேஜர் அறையினுள் அமர்ந்திருப்பர் என்றார் அவர்.

### பெங்களூரில்

பெங்களூர் ரிசர்வ் பாங்கைச் சேர்ந்த சுமார் 450 மூன்றும் பிரிவு ஊழியர்கள் இன்று உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர் இதனால் பாங்கு நடவடிக்கைகள் பாதிக்கப்பட்டன.

பிரதான கட்டிடத்தின் முன்னால் ஊழியர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர். பின்னர் ஸ்தல மானேஜரிடம் மொத்தமாகச் சென்று தங்களது கோரிக்கைகளை கூறினர். இதற்கு முன்னர் இந்திய தொழிற்சங்க மையத்தைச் சேர்ந்த திரு என். எல். உபாத்யாயா ஊழியர் கூட்டத்தில் பேசினார்.

### புதுடில்லியில்

புதுடில்லியிலுள்ள ரிசர்வ் பாங்கைச் சேர்ந்த சுமார் 1000 மூன்றும் பிரிவு ஊழியர்கள் ஒரு நாள் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்தனர்.

பாங்கின் குமாஸ்தாக்கள் அனைவரும் ஆஜர் பட்டியலில் கையெழுத்திட்ட பின்னர், மானேஜர் அலுவலகம் முன்னர் அமர்ந்ததாக ஒருவர் கூறினார்.

இவர்கள் செய்த உள்ளிருப்பு வேலை நிறுத்தத்தால் தலைநகரிலுள்ள தேசிய மய பாங்குகள் அனைத்திலும் வேலை பாதிக்கப்பட்டது.

தங்களது கோரிக்கைகள் ஏற்கப்படா விட்டால் அதற்கு ஆதரவாக தேசிய மட்டத்தில் கிளர்ச்சி செய்ய நேரிடுமென இந்திய பாங்கு ஊழியர்

### சென்னையில்

பம்பாய் அலுவலக ஊழியர் ஸ்டிரைக்கிற்கு ஆதரவாக இங்குள்ள ரிசர்வ் பாங்கு ஊழியர்கள் இன்று வேலைக்குவராமல் ஸ்டிரைக் செய்தனர். சுமார் 1400 மூன்றும் பிரிவு ஊழியர்கள் வேலைக்கு வரவில்லை. இதனால் பாங்குநடவடிக்கைகள் ஸ்தம்பித்தன. காலையில் 100 சதவிகிதம் எவரும் வரவில்லையென ரிசர்வ் பாங்கு அதிகாரி கூறினார்.

ஊழியர்கள் ஊர்வலமாகவும் சென்றனர். இந்த வேலை நிறுத்தத்துக்குப் பின் தொழிலாளர் பிரதிநிதிகளுடன் பாங்கு நிர்வாகம் உடன்பாடு செய்து கொண்டது. பழுதடைந்த கரன்சி நோட்டுகளை அழிப்பது சம்பந்தமாக முறையான தணிக்கை வேண்டும் என்ற தொழிலாளர்களின் கோரிக்கையும் ஏற்கப்பட்டது.

# அமெரிக்க சதிகாரர்கள் சாகசங்கள்

அமெரிக்கச் செய்தி ஏஜென்சியும் (இதற்கு அமெரிக்காவுக்கு வெளியே யுஎஸ்ஐஎஸ் என்று பெயர்) அதன் கூட்டாளியான "வாய்ஸ் ஆப் அமெரிக்கா" (அமெரிக்க வானொலி) வும் எவ்வாறு செயல்படுகின்றன என்பதைப்பற்றி அமெரிக்கவாரப்பத்திரிகையான "நியூஸ் வீக்" அண்மையில் எழுதியுள்ளது. இந்த 'அமெரிக்க பிரசார எந்திரம் வாஷிங்டனின் அதிகாரபூர்வமான கொள்கையைப் பரப்பும் விஷயத்தில் வெற்றிபெறக்காணோம் என்று கருத்துத்தெரிவித்துள்ளது.

அமெரிக்கச் செய்தி ஏஜென்சிக்குள்ள சிரமம் என்ன? தனது வேலை செய்திகளைத் தெரிவிப்பதா அல்லது பிரசாரம் செய்வதா என்பதையே அது இன்னும் நிச்சயிக்கவில்லை என்பது தான். மக்கள் பிரச்சாரத்தை எதிர்க்கின்றனர். அதிலும் மோசமான நோக்கங்கொண்ட பிரசாரத்தை முற்றிலும் எதிர்க்கின்றனர் என்பதை அனுபவம் புலப்படுத்துகிறது. அமெரிக்கச் செய்தி ஏஜென்சியும் அதன் துணை ஸ்தாபனங்களும் தோன்றிய பிறகு. உலகம் எவ்வளவோ மாறிவிட்டது.

நாடுகளும் மக்களும்மாறியுள்ளனர். நாடுகளுக்கிடையே நிலவும் உறவுகளும் மாறியுள்ளன. அதாவது கெடுபிடி யுத்தத்தை ஆதரித்து வந்த டல்லஸின் காலத்துக்குப் பிறகு எவ்வளவோ மாற்றங்கள் நேர்ந்துள்ளன. எனவே தான், அமெரிக்க செய்தி ஏஜென்சியைத் தோற்றுவித்ததன் நோக்கமே காலாவதியாகிவிட்டது என்று புல்பிரைட் போன்ற அமெரிக்க செனட்டர்களும் பிற பொதுஜன பிரமுகர்களும் கருதுகின்றனர்.

### மறைமுகப் பிரச்சாரம்

ஆனால் அமெரிக்க வெள்ளை மாளிகையில் உள்ளவர்களோ, அவர்களின் ஆதரவாளர்களோ இவ்வாறு நினைக்கவில்லை, அவர்கள் அமெரிக்கச் செய்திஏஜென்சியின் நடப்பு ஆண்டுச்செலவுக்கு மேலும் 20 கோடி டாலரை அனுமதித்துள்ளனர். எனவே அமெரிக்கச் செய்தி ஏஜென்சி அமெரிக்காவின் அதிகாரபூர்வமான நோக்கினைப்பரப்பும்பழைய கொள்கையையே தொடர்ந்துபின்பற்றிவரும் நிச்சனுக்காக மறைமுகப் பிரசாரம் செய்துவரும் என்றே கூறலாம்

எனினும் அமெரிக்கச் செய்தி ஏஜென்சி இத்தகைய பிரசாரத்தை அமெரிக்க மக்களுக்காக நடத்தவில்லை. அமெரிக்காவுக்குள் இத்தகைய பிரசாரத்தை நடத்தத் தடையேதும் இல்லை. ஆயினும் மிகவும் குறுகிய அளவிலேயே இந்த பிரசாரம் அங்கு அனுமதிக்கப்பட்டு உள்ளது. அமெரிக்கசெய்தி ஏஜென்சி தயாரித்த "செக்கோஸ்லோவாகியா 1968"" அரண்கள்", 'பெரும்பான்மையான மௌனிகள்' 'வியத்நாம்! வியத்நாம்!" ஆகிய திரைப்படங்களைப் பார்க்கும் வாய்ப்பு அமெரிக்க மக்களுக்குக் கிட்டியிருந்தால், அவர்களே அவற்றைக் கண்டித்திருப்பார்கள். (இவற்றில் "வியத்நாம்! வியத்நாம்!" படத்தைத் தயாரிப்பதற்கு மட்டும் இரண்டரை லட்சம் டாலர்கள் செலவாயின. எனினும் அந்தப் படத்தை "திறமையாக" எடுக்கவில்லை என்ற காரணத்தால் அந்தப்படம் பின்னர் வாபஸ் பெறப்பட்டது. இதே போல் சுதந்திர ஐரோப்பா வானொலி (ரேடியோ ஃப்ரீஈரோப்); சுதந்திர வானொலி (ரேடியோ லிபர்ட்டி) ஆகியவை கிழக்கு ஐரோப்பாவுக்காகவும் சோவியத் யூனியனுக்காகவும் ஒலிபரப்பிவரும் பல ஒலிபரப்புக்களை அமெரிக்க மக்கள் கேட்க நேர்ந்தால் அப்போதும் இதே கதைதான் ஏற்படும். வாய்ஸ் ஆப் அமெரிக்கா ஒலிபரப்புக்களைப் பற்றிக் கூறவேண்டியதில்லை, இந்த ஒலிபரப்புகள் எல்லாம் கெடுபிடி யுத்த அரசியலைப் பரப்பவே பாடுபடுகின்றன; இந்த நாடுகளின் மக்களை அவர்களது அரசாங்கங்களைக் கவிழ்க்குமாறு உபதேசம் செய்கின்றன. சுதந்திர ஐரோப்பா வானொலி, சுதந்திர வானொலி ஆகிய இரண்டும் உண்மையில் அமெரிக்க அரசாங்கத்தின் செலவில் தான் நடத்தப்பட்டு வந்தன என்ற உண்மை கூட அமெரிக்க மக்களிடமிருந்து மூடி மறைக்கப்பட்டது. பிற நாடுகளுக்கும் மக்களுக்கும் எதிராகச் சதி செய்யும் பிரசார வேலைக்குத்தாம் கொடுக்கும் வரிப்பணம் செலவிடப்படுகிறது என்ற உண்மையை அமெரிக்க மக்கள் தெரிந்திருக்கவில்லை இந்த வானொலிகளெல்லாம் தனிப்பட்டோரின் நன்கொடைகளின் மூலமே நடைபெறுவதாகத்தான் அவர்களுக்குக் கூறப்பட்டது. ஆனால் உண்மையில் இவற்றுக்கு சி. ஐ. ஏ. தான் பண உதவி செய்து வருகிறது என்ற குட்டுவெளிப்பட்ட பிறகோ, அமெரிக்க மக்கள் ஆத்திரம் கொண்டனர். அவர்களதுஆத்திர உணர்ச்சி அமெரிக்கக் காங்கிரஸ் நடவடிக்கைகளிலும் பிரதிபலித்தது.

### வானொலிக்கு சி.ஐ.ஏ. உதவி

உலகின் பல்வேறு பகுதிகளிலும் அமெரிக்கச் செய்தி ஏஜென்சி எவ்வாறுசெயல்படுகின்றது என்பதைக் குறித்துவரும் விமரிசனங்களைப் பார்க்கும் போது, அமெரிக்காவின் அதிகாரபூர்வமான கொள்கைப் போக்கினை பரப்பும் அதன் முயற்சி தோற்றுப் போய்விட்டதாகவே தெரிகிறது. உதாரணமாக, ஐரோப்பிய நாடுகளில் 'வாய்ஸ்ஆப் அமெரிக்கா", வைச் செய்திகளைக் கேட்பதற்காக யாரும் திருப்பக் காணோம், ஜாஸ் சங்கீதம் கேட்பதற்காகவே பெரிதும் திருப்புகிறார்கள்.

### பிரச்சாரம் எடுபடவில்லை

இந்தியாவிலும், அண்மையில் நடந்த இந்தியா-பாகிஸ்தான் போருக்கு பின்னர் அமெரிக்கப் பிரச்சாரம் ஈடுபடவில்லை என்பதை அமெரிக்க பத்திரிகைகளே எழுதியுள்ளன. இதற்கு முன்னரும்கூட இந்திய மக்கள், அமெரிக்க செய்தி ஸ்தாபனத்தை (யு எஸ் ஐ எஸ்) சந்தேகக் கண்ணோடுதான் நோக்கி வந்தனர். அமெரிக்க செய்தி ஸ்தாபனத்தையும். பிற அயல்நாட்டு செய்தி ஸ்தாபனத்தையும் பிற அயல் நாட்டுச் செய்தித் துறைகளையும் சம்பந்தப்பட்ட அயல் நாட்டு அரசாங்கங்களின் கான்சுலேட் அலுவலகங்கள் இல்லாத நகரங்களில் நடத்துவது சம்பந்தமாக, இந்திய அரசாங்கம் விதித்த சில விதிமுறைகளின்படி நடந்து கொள்ளத் தவறிய காரணத்தால், இந்தியாவிலும் அதன் கிளைகள் பலவற்றை அவர்கள் மூட நேர்ந்தது என்பது யாவரும் அறிந்ததே.

கிழக்கு ஐரோப்பாவில் அமெரிக்கச் செய்தி ஏஜென்சி, சிஐஏயின் ஒத்துழைப்போடு சோசலிஷ விரோத சக்திகளுக்கு வழிகாட்டி வருவதாக மக்கள் கூறுகின்றனர். எனவே அந்த நாடுகளிலுள்ள நேர்மையும், கண்ணியமும் மிக்க மக்களுக்கு அமெரிக்க செய்தி ஏஜென்சி என்ற பெயரைக் கேட்டாலே குமட்டுகிறது. இந்த நாடுகள் பலவற்றிலுமுள்ள அமெரிக்க நூலகங்களுக்கு "ரகசியப் போலீசார் அல்லது முட்டாள்கள்" தான் செல்கின்றனர் என்றும் கூறப்படுகிறது.

—டாஸ்

## மார்க்சிஸ்ட் கட்சியின்......

(2ம் பக்கத் தொடர்ச்சி)

கள். நூற்றுக்கணக்கான வண்டிகளில் மங்கையர்கள் எல்லாம சிவப்பு சேலையுடன் காணப்பட்டது அபூர்வ காட்சியாக இருந்தது. இந்த மாட்டுவண்டி ஊர்வலத்திற்கு இடது கம்யூனிஸ்ட் தலைவரான கே. பி. ஜானகியம்மாள் தலைமை வகித்தார்.

### மாணவர்கள்

ஊர்வலத்தில் நகரில் உள்ள எல்லா கல்லூரிகளையும் சேர்ந்த மாணவர்களும் அணிவகுத்து வந்தார்கள் இந்த மாணவர்கள் இடது கம்யூனிஸ்ட் மாணவர் சங்கங்களை சேந்தவர்கள் என்று தெரிகிறது.

ஊர்வலத்தில் தமிழகத்தில் உள்ள எல்லா மாவட்டங்களையும் சோந்த இடது கம்யூனிஸ்ட் தொண்டர்கள் மட்டுமல்லாது பிறமாநிலங்களை சேர்ந்தச் பிரதிநிதிகளும் வந்தார்கள். இவர்களில் கேரளத்தில் இருந்து வந்தவர்களே அதிகமாகக் காணப்பட்டனர். ஏராளமான பஸ்களும் லாரிகளும் ஊர்வலத்தில் ஊர்ந்து சென்றன.

கேரளத்தைச் சேர்ந்தவர்கள் மலையாள மொழியில் கோஷங்களை இசையுடன் எழுப்பியவாறும் சென்றனர்.

### இந்திராவுக்கு எதிராக

ஊர்வலத்தில் சென்றவர்கள் எல்லோருமே குறிப்பாக இந்திரா காந்திக்கு எதிரான கோஷங்களை முழக்குவதிலேயே அதிக அக்கறை காட்டினார்கள் இந்திரா காந்தியை கேலி செய்யும் கார்ட்டூன்களையும் ஊர்வலத்தினர் எடுத்துச் சென்றனர்.

ஊர்வலம் சென்ற 8 மைல் பாதை நெடுகிலும் செங்கொடி தோரணங்கள் கட்டப்பட்டு அலங்கார வளைவுகள் போட்டிருந்தார்கள். ஊர்வலத்தை காண்பதற்கு ரோட்டின் இருமருங்கிலும் லட்சக்கணக்கான மக்களின் கூட்டம் காணப்பட்டது.

ஊர்வலம் காரணமாக இன்று மாலை 4 மணிக்கு மேல் நகரின் போக்குவரத்து ஸ்தம்பித்து விட்டது, எங்கு பார்த்தாலும் சிவப்புக் கொடிகளும், சிவப்பு தோரணங்களும் கட்டப்பட்டிருந்ததால் நகரின் தோற்றமே மாறிப் போய் காட்சியளித்தது. 3—7—72

## "தினமணி"

"இடதுகம்யூ பெரும் ஊர்வலம்'என்னும் தலைப்பில் "தினமணி" பின்வருமாறு செய்தி வெளியிட்டுள்ளது.

இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டின் முடிவை ஒட்டி இன்று இங்கு இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி மூன்று மைல் நீளமுள்ள பெரிய ஊர்வலம் நடத்திற்று ஊர்வலத்தில் ஆயிரக்கணக்கில் பாதசாரிகள் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்க அம்சம்.

ஊர்வலத்தில் ஏராளமான லாரிகள், பஸ்கள் காட்சி அளித்தன. செங்கொடிகள், கட்சித் தலைவர்கள். சர்வதேசகம்யூனிட் தலைவர்கள் ஆகியோர்களின்உருவப் படங்கள் தாங்கி ஏராளமான சைக்கிள்களும், சைக்கிள் மாட்டு வண்டிகளும் ஊர்வலத்தில் கலந்து கொண்டன மத்திய சர்க்காரையும் அதன் வரிகளையும் கண்டித்து கேலிச்சித்திரங்கள் காணப்பட்டன. வழக்கமான கிராம நடனங்கள் நடந்தன அகில இந்திய தலைவர்கள் அமர்ந்திருந்த லாரியின் முன்பு சுமார் 1000 கட்சித் தொண்டர்கள் அணிவகுத்துச் சென்றார்கள்.

சுந்தரையா, பி. ராமமூர்த்தி, ஏ.கே. கோபாலன், ஈ. எம் எஸ். நம்பூதிரிபாட், ஜோதிபாசு, ஹரிகிருஷ்ணன் சிங், ஹரேகிருஷ்ணகோனர், ரணதிவே மற்றும் பல தலைவர்கள் ஊர்வலத்தில் கலந்து கொண்டார்கள். ஊர்வலத்தினர் மார்க்ஸிஸ்ட் கோஷங்களையும் இந்திரா காந்தியை எதிர்த்து கோஷங்களையும் கோஷித்தார்கள்.

ஒரு இடத்தை ஊர்வலம் கடந்து செல்ல சுமார் 100 நிமிஷங்கள் ஆயிற்று. 3—7—72

—தினமணி 3—7—72

## திண்டுக்கல்

# நகரசபைத் தலைவர் தலைமைவகிக்கலாமா?

## எஸ். ஏ. தங்கராஜ் கேள்வி

திண்டுக்கல், ஜூன். 3—

சென்ற 29—6—72மாலை 5 மணிக்கு திண்டுக்கல் நகரசபைக் கூட்டம் ஆரம்பமானது. வழக்கத்திற்கு மாறாக நகரசபைத் தலைவர் பொன். சீனிவாசனை போலீசார் மன்றக் கூட்டத்தின் உள்ளே அழைத்து வந்தனர். ஜன்னல்களையும், கதவுகளையும் மூடிக் கொண்டனர்.

போலீஸ் நகரமன்றத்தை சூழ்ந்துகொண்டது. கட்சிக்காரர்கள் திரண்டுவந்து இருந்தனர். ஒத்திவைப்பு தீர்மானத்தை ஆதரித்து மன்ற உறுப்பினர் தோழர் எஸ் ஏ. தங்கராஜன் பேசும்போது,

### கிரிமினல் வழக்கு

நகரசபை தலைவர் திரு. பொன். சீனிவாசன் என்ற தாங்கள் கிரிமினல் வழக்கில் ஈடுபட்டதின் காரணமாக கைது செய்யப்பட்டு ஜாமீனில் வெளிவந்துள்ள சமயம் மன்றக் கூட்டத்திற்கு தலைமை வகிப்பது சரியல்ல. நீங்கள் இந்த சமயம் சாதாரண மனிதருக்குள்ள மனிதப் பண்பை கூட இழந்து விட்டீர்கள். இப்படி தகுதி இழந்த பின் நீங்கள் தலைமை தாங்குவது சபையின் அந்தஸ்திற்கு அழகல்ல. எனவே மன்றக் கூட்டத்தை ஒத்திவையுங்கள். அல்லது வேறு யாராவது தலைமை தாங்கட்டும் என்று கூறினர்.

நான் உங்கள் ஒத்திவைப்பு தீர்மானத்தை ஏற்கவில்லை, நிராகரிக்கின்றேன் என்றார் திரு. பொன் சீனிவாசன் தமிழரசுக்கழக மன்ற உறுப்பினர் திரு. நா. முத்துலக்கையன் கூட்டத்தை தொடர்ந்து நடத்த வேண்டும் என்று தீர்மானம் கொண்டு வந்தார். தி. மு. க. மன்ற உறுப்பினர் கே. ஜி. அந்தோனி அதை ஆதரித்தார். ஒத்திவைப்பு தீர்மானம் ஏற்க மறுத்ததால் தோழர்கள் எஸ் ஏ. தங்கராஜன், ஏ. முனுசாமி, மன்ற உறுப்பினர்கள் வெளி நடப்பு செய்தனர்.

இதைத் தொடர்ந்து இண்டிகேட் காங்கிரஸ், சிண்டிகேட் காங்கிரஸ் சுதந்திரா உறுப்பினர்கள் 10 பேர் வெளிநடபபு செய்தனர்.

### மன்றத்தலைவர் பொன்சீனிவாசன் தலைமையில் குண்டர்படையா?

சென்ற 28—6—72 விவசாயிகள் போராட்டத்தில் கலந்து கொள்ள வந்த கிராமப்புற விவசாயிகளை வழி மறித்து வண்டியின் சாவிகளைப் பிடுங்கிக் கொண்டு விவசாயிகளை அடித்து கைகளை கட்டி போலீஸ் நிலையத்திற்கு அழைத்து சென்றனராம. ஊர்வலத்தை ஏறபடுகள் செய்து கொண்டு இருந்த நகர் மன்ற உறுப்பினர் மாரியப்பன் திரு. சீனிவாசன் அவருடன் இருந்த குண்டர்களுமாக சேர்ந்து நையப் புடைத்துள்ளனர். இதைத் தொடர்ந்து சட்டமன்ற உறுப்பினர் வீட்டுக்குச் சென்று வீட்டில் இருந்த பிச்சாலு, ராஜமாணிக்கம் ஆகிய தூங்கியவர்களை எழுப்பி நையப் புடைத்துள்ளனர். மாரியப்பன், பிச்சால் என்ற இருவரும் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

### திண்டுக்கல் சேர்மனுக்கு மதுரை மேயர் துணையா?

கடந்த இரண்டு நாட்களாக நகரத்தில் தி.மு.க. இயக்கத்தவர்களில் ஒரு சிலர் பொன் சீனிவாசனைச் சுற்றிக்கொண்டு, காங்கிரஸ் ஊழியர்களை அச்சுறுத்தி வருகின்றனர் 28ந்தேதி மாலையும், 29ந்தேதி காலையும் மதுரை மேயர் திரு. முத்து திண்டுக்கல்லில் முகாமிட்டு இருந்தார் என்று நகரமே சொல்லிக்கொள்ளுகிறது. ஒரு கால் தனக்கு வாரிசு தேடவந்தார் போலும்.

### எடுபிடிகளாக காவல்துறை

29—6—72 மன்றக் கூட்டத்திற்கு வந்துகொண்டு இருந்த சிண்டிகேட் காங்கிரஸ் மன்றஉறுப்பினர் திரு மனோகரனை ஒரு தி. மு. க. நபர் தலையில் காங்கிரஸ் துண்டை கட்டிக்கொண்டு வாயில்வந்தபடி பேசுகிறாராம். அண்மையில்இருந்த போலீசார் வேடிக்கை பார்த்துக்கொண்டு இருந்ததுமல்லாமல் கண்டிக்கச் சென்ற நமது தோழர் தாயுமான் என்பவரை நீங்கள் இங்கு இருக்க வேண்டாம். அவன் பேசிவிட்டுப் போகிறான் என்றார்களாம்.

எப்படி பாதுகாப்பு அ[illegible] இடத்தில் க[illegible]டித்தித குள்ளே சேர்மன் பின்னால் காவல் துறையினர் [illegible]ற் பிடித்து செல்கின்றனர் [illegible]ல்

## மார்க்சிஸ்ட் கட்சி மாநாட்டின்

# மிக இளைய பிரதிநிதி

அந்தச் சின்னஞ்சிறு நங்கையான தோழியர் எஸ். நிர்மலா குமாரிக்கு வயது இருபத்திரண்டேதான் கட்சியின் 9-வது மாநாட்டில், மிக மிகக் குறைந்த வயதினர் நிர்மலாதான். கொல்லத்தில் மாதர் இயக்கத் தலைவி கேரள பல்கலைக் கழகத்தில் அவர் ஒரு விஞ்ஞானப் பட்டதாரியுங்கூட. 1971-ம் ஆண்டில் நடந்த பி. எஸ்ஸி தேர்வில் கணித பாடத்திலும், புள்ளி விபரம், பௌதீகம் ஆகிய பாடங்களில் முதல் வகுப்பில் தேறியுள்ளார். இவர் எப்பொழுதும் மாணவர் இயக்கத்தில் மிகவும் சுறு சுறுப்பாகப் பங்கெடுத்துக் கொள்ளுகிறார். இந்திய மாணவர் சம்மேளனத்தின் துவக்க மாநாடு திருவனந்தபுரத்தில் நடைபெற்றபோது. இளம் தோழியர் நிர்மலா அம் மாநாட்டுக்கு கேரளத்தின் கொல்லம் மாவட்ட மாணவர் சங்கப் பிரதிநிதியாகக் கலந்து கொண்டார்.

இப்பொழுது, தோழியர் நிர்மலா கேரள மாதர் சம்மேளனத்தின் ஒரு தலைவியாக விளங்குகிறார். இவர் கொல்லம் மாவட்ட மாதர் சங்கத்தின் செயலாளராகவும், கேரள மாநில மாதர் சம்மேளனத்தின் ஓர் உறுப்பினராகவும் விளங்குகிறார்.

அது மட்டுமின்றி, முந்திரித் தொழிலாளர் சங்க இயக்கத்திலும் தோழியர் நிர்மலா உற்சாகமாகப் பங்குகொள்ளுகிறார் கேரளத்தில் முந்திரித் தொழிற்சங்கம், ஒரு முக்கியமான தொழிற்சங்கமாகும். அந்தச் சங்கத்தின் மாநிலக் குழுவில் நிர்மலா ஒரு உறுப்பினர் என்றால், அவருக்கு தொழிலாளர் மத்தியில் செல்வாக்கும், சிறப்பும் எவ்வளவு இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம்,

கட்சியின் 9-வது மாநாடு பற்றிஅவரிடம் கேட்டபோது, மிகுந்த பெருமையோடு "மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏதாவது ஒரு அரங்கத்தில் பணியாற்றக்கூடிய சகோதரர்களையும், சகோதரிகளையும் கொண்டஒரு கட்சிக் குடும்பத்தை இங்கே காண்கிறேன். அந்தக்குடும்பத்தில் நானும் இருக்கிறேன் என்பதில் எனக்கு அளவரிய மகிழ்ச்சி" என்று கூறினார்.

இவர் யார்? இவரது தந்தையார், அன்று ஒன்றாக இருந்த கம்யூனிஸ்ட் கட்சியின் கொல்லம் மாவட்டக்குழுவின் செயலாளராக 1957 முதல் 1964 வரை இருந்திருக்கிறார் அவரது புரட்சிகரமான பராமரிப்பில் வளர்ந்து மார்க்சிச—லெனினிச புரட்சி போதனைகளைப் பெற்று, குமாரி நிர்மலா, 1969.ல் கட்சியின் உறுப்பினராக ஆனார்.

எனது வாழ்க்கையிலேயே முதல் தடவையாக அகில இந்திய கட்சி மாநாட்டில் கலந்து கொள்ளும் வாய்ப்புக் கிடைத்ததற்கு நான் எவ்வளவோ கொடுத்து வைத்தேன் என்றே சொல்லவேண்டும் என்று பெருமையோடு கூறினார்.

— நமது நிருபர்

## சங்கரன்கோவில் டாக்டர் மாற்றப்பட்டார்

## சர்வகட்சி கிளர்ச்சி மீது

# அரசு நடவடிக்கை

சங்கரன்கோவில், ஜூலை, 3—

இங்குள்ள அரசு மருத்துவ மனையில் பணியாற்றிய டாக்டர் மீனாட்சி சுந்தரம் சர்வகட்சி கிளர்ச்சியையடுத்து வேறிடத்துக்கு மாற்றப்பட்டுள்ளார்.

10 மாத காலமாக இந்த மருத்துவ மனையில் பணியாற்றிய டாக்டர் மீனாட்சி சுந்தரத்தின் மீது பொது மக்கள் பல புகார்கள் எழுப்பினர்கள் இதன் பேரில் மாவட்ட மருத்துவ அதிகாரி விசாரணையும் நடைபெற்றது அப்போது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதாரபூர்வமான சாட்சியங்களைக் கூறியது.

சர்வகட்சி சார்பில் டாக்டரை மாற்றக் கோரி பொதுக் கூட்டங்களும் நடத்தப்பட்டன மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி கிளர்ச்சியை முன்னின்று நடத்தியது இதையடுத்து டாக்டர் மாற்றப்பட்டுள்ளார்.

# கூடல் மாநகரிலே கொள்கை முழக்கமிட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் செம்படை

**மதுரை ஜூலை 4— மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டின் கடைசி நாளில் நடந்த உணர்ச்சி மிகுந்த ஊர்வலத்துக்கு முன் மதுரை அரசரடியில் ஒரு ஜனசமுத்திரமே திரண்டு இருந்தது எனக் கூறினல் அது மிகையாகாது.**

லாரிகளும், பஸ்களும் சைக்கிள் ரிக்சாக்களும் மாட்டு வண்டிகளும், டயர் வண்டிகளும், சைக்கிள்களும் அலங்கார ஜோடனையுடன் கூடின. பலர் காலையிலிருந்து அங்கு குழுமி அலங்கார வேலைகளில் ஈடுபட்டனர்

இன்று தமிழகத்தில் அரசியல உணர்வும், எழுச்சியும் பெற்றுள்ள மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் புதிய சக்தி இதுவெனக் கூறும் வகையில் அவர்களது உணர்ச்சி மிகுந்த சுறுசுறுப்பான பணிகளும் ஏற்பாடுகளும் இருந்தன.

கட்டுச் சாதங்கள் கட்டி, 100, 200, 300 மைல்களுக்கு அப்பாலிருந்து ஊர்வலத்திற்கு வந்தவர்களும் உண்டு பலர் இங்கு வந்து தாங்களே சமைத்து உண்டதும் உண்டு

சென்னையிலிருந்து ஆறு பஸ்களும், 2 லாரிகளும் வந்தன. ரெயில்களிலும, தனி பஸ்களிலுமாக, 1000க்கும் மேற்பட்ட மாணவர்களும் தொழிலாளர்களும் வந்தனர் கேரளத்திலிருந்து 35 லாரிகளும் பஸ்களும் வந்து ஊர்வலத்தில் கலந்து கொண்டன

பெங்களூரிலிருந்து பஸ்களிலும், தனித் தனியாகவும் வந்திருந்தனர். தர்மபுரியிலிருந்து 2 பஸ்களும், லாரிகளும் வந்தன தஞ்சை மாவட்டத்திலிருந்து 80 பஸ் லாரிகளுக்கு மேல் வந்தன. நாகை வட்டத்திலிருந்து 16 லாரிகளும், 2 பஸ்களும் வந்திருந்தன

சேலம் மாவட்டத்திலிருந்து 27 பஸ்களும், லாரிகளும் வந்திருந்தன நீலகிரி, கோவை, திருப்பூர், பொள்ளாச்சி, பவானி, ஈரோடு, சிறுமுகை, வால்பாறை, கணியூர் (இன்னும் எத்தனை எத்தனையோ ஊர்களின் விபரங்கள் நமக்கு இன்னும் கிடைக்கவில்லை)

120க்கு மேற்பட்ட பஸ்கள் கோவை மாவட்டத்திலிருந்து வந்திருந்தன அதே போல், தென்னுற்காடு, வட ஆற்காடு மாவட்டங்களிலிருந்தும, நெல்லை, கன்னியாகுமரி மாவட்டங்களிலிருந்தும், திருச்சி, ராமநாதபுரம் மாவட்டத்திலிருந்தும் இறுதியாக மதுரை மாவட்டத்தின் ஒவ்வொரு தாலுகா நகரத்திலிருந்தும் வந்த பஸ்களும், லாரிகள், கார்கள், வேன்கள் 600க்கு மேலிருக்கும் இவை அனைத்துமே ஊர்வலத்தில் பங்கு கொள்ள முடியவில்லை பல பஸ்களும், லாரிகளும் ஆங்காங்கு நிறுத்தப்பட்டன 400-க்கு மேற்பட்ட பஸ்கள் லாரிகள் தாம் ஊர்வலத்தில் வர முடிந்தது

### புற்றீசல் போல் புறப்பட்டன

ஜூலை 21-ம் தேதி மாலையிலிருந்து மக்கள் வந்து குவிய ஆரம்பித்து விட்டனர். பல இடங்களில் மதுரைக்கருகில் அவர்களே சமைத்து உணவருந்தினர். மறுநாள் காலையிலிருந்து புற்றீசல் கிளம்பியது போல, இந்த பஸ்களும், லாரிகளும் சாரி சாரியாக வந்து குவிந்த காட்சி இதுவரை மதுரை நகரமே கண்டிராத காட்சியாகும்.

மதுரை மாவட்டத்திலிருந்து போட்டி போட்டுக் கொண்டு மாட்டு வண்டிகளும், ரிக்ஷாக்களும் லாரிகளுடன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கோஷங்களையும் பெரும் பெரும் கார்ட்டூன் தட்டிகளையும் தாங்கி வந்தன.

ஜூன் 30ம் தேதிக்கு முன்பு மதுரை நகரத்தில் ஒரு சில இடங்களில்தான் அலங்கார வளைவுகள் இருந்தன ஆனல் ஜூலை 2-ம் நாள் காலையில் பார்த்தால்- அப்பப்பா- இது என்ன விசித்திரம் இத்தனையும் எப்படி இரவோடு இரவாக முடித்தார்கள் என்று மதுரை நகர மக்கள் ஆச்சரியத்தில் மூழ்கிடும் அளவுக்கு எங்கு பார்த்தாலும் வளைவுகள் கட்டப்பட்டு இருந்தன.

மிகப் பெரிய அளவில் அரிவாள் சுத்தியல் சின்னங்கள் பல இடங்களில், பிரம்மாண்டமான கார்ட்டூன் தட்டிகள் பல இடங்களில், மின் விளக்குகள் பொருத்தப்பட்ட செம்மயமான மிக உயரமான ஆர்ச்வளைவுகள், மின்சார பல்புகள் பொருத்தப்பட்ட சிறப்பான ஆர்ச்சுகள் பல எங்கிருந்து இவை தோன்றின என வியக்கும் வண்ணம் ஜூலை 2ம் நாள் காலையில் தோன்றி விட்டன

### நிருபர் கருத்து

500க்கு மேல் இருக்கும் என ஒரு பத்திரிகை நிருபர் கூறினர். இவைகளுக்கு செலவிடப்பட்ட பணம் ரூபாய் எவ்வளவு இருக்கும் என்று அவர் வினவினர். இதற்கு எவ்வளவு செலவாகி இருக்கும் எனக் கேட்டார்? இரண்டு லட்சம் செலவாகியிருக்குமா? எனக் கேட்டார். ரூபாய் மதிப்பில் இவற்றைச் சொல்ல முடியாது. காரணம்? தேவையான சாமான்களை வாங்கத்தான் பணம் வசூல் செய்து தோழர்கள் செலவழித்தார்கள். ஆனல் இந்த கோஷங்களையும் பாட்டாளி வர்க்க உரிமை முழக்கங்களையும், அழகான ஆர்ச்சுகளையும், தொழிலாளர்கள்—மாணவர்கள் — மத்தியதர வர்க்க ஊழியர்கள் ஆகியோர் தாங்களே உருவாக்கி அமைத்த உழைப்பானது 2 லட்சமும் அதற்கு மேலும் இருக்கும் என அருகிலிருந்த தோழர் கூறினர். இவ்வாறு இரவு பகலாக மதுரை நகரத்தோழர்கள் நகரில் செய்த ஜோடனைகள். அணிவகுத்து வந்த 2 லட்சம் பேரின் ஆர்ப்பாட்ட ஊர்வலத்திற்கு அழகுக்கு அழகு செய்தன வீர முழக்கங்களுக்கு மேலும் வீர உணர்ச்சியூட்டுபவையாக இருந்தன.

"மதுரை மாநரத்தின் 45 வார்டுகளிலும் அருகாமையிலுள்ள கிராமங்களிலும் ஆர்ச்சுகள், விளக்கக் கார்ட்டூன் தட்டிகள், போஸ்டர்கள், செங்கொடித் தோரணங்கள், கொடிகள் இரண்டே நாட்களில் மதுரை நகரையே சிகப்பு மயமாக்கிவிட்டன.

### தொண்டர்களின் அரும்பெரும் பணி

இந்த சமயத்தில் மதுரை நகர தோழர்களும், மாவட்டத் தோழர்களும் சென்னை நகரம் முதற்கொண்டு குமரி வரை உள்ள நம் கட்சியின் தலைமையில் நடக்கும் பல இயக்கங்களில் போராட்டங்களில் பங்குகொண்டுவரும் மாணவர்களும், வாலிபத் தோழர்களும், தொழிலாளர்களும், மத்தியதரவர்க்க ஊழியர்களும். விவசாயிகளும் ஜூன் 18லிருந்தே மதுரைக்கு வந்து, ஜூலை 3ம்நாள்வரை ஆற்றிய அரும்பெரும் பணிகள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பெருமைப்படத்தக்க நிகழ்ச்சியாகும் நமக்குபுதிய வேகத்தையும் விறு விறுப்பையும் அளித்து வருவதற்கான காரணம் எது என்பதனை இந்த இளம் தொண்டர்களின் உணர்ச்சி மிகு பணிகள் எடுத்துக் காட்டின.

ஊர்வலம் அரசரடி மைதானத்திலிருந்து புறப்பட்டுவந்த அந்த எட்டு மைல் தூரத்திலும் உணர்ச்சி மிகுந்த கோஷங்கள், கொள்கை விளக்க முழக்கங்கள் ஒலித்து எதிரொலித்தன. இந்திரா காங்கிரஸ் ஆட்சியின் அடக்குமுறைகளையும் வங்காளப் படுகொலைகளையும் வன்மையாக கண்டித்து முழங்கினர். தி. மு. க. அரசின் அடக்கு முறையைக்கண்டித்துஅதை கைவிடக்கோரும் கோஷங்களையும் எழுப்பி வந்தனர்.

### வாண வேடிக்கை

இறுதியில் பொதுக் கூட்ட மைதானத்தில் (ரேஸ் கோர்ஸ்) இரவு 9மணிக்கு பொதுக் கூட்டம் ஆரம்பமாயிற்று. ஒன்பதாவது மாநாட்டின் அறிகுறியாக அதிர் வேட்டுகளுடன் பொதுக் கூட்டம் ஆரம்பமானது. அதன் பிறகு வண்ண வண்ண, சிதறல்களுடன் கூடிய வாணவெடிகள் வெடிக்கப்பட்டன. பொதுக் கூட்டத்தில் தலைவர்கள் பேசுவதற்கு முன்பு மிகப் பெரிய மத்தாப்புத் தோரணமொன்று பல வண்ணப் பொறிகளை வெளியிட்டு பொறிந்தது. அது முழுவதும் எரியும் பொழுது, அந்தவண்ண மத்தாப்புக்களிலே அரிவாள் சுத்தியலும், "மார்க்சிஸம்" என்று பொறிக்கப்பட்டதும் வெளிப்பட்டபோது கூட்டத்திலிருந்த மூன்று லட்சம் மக்களும் கரகோஷம் எழுப்பி மார்க்சிஸம்—லெனினிசம் வெல்க! மக்கள் ஜனநாயகப் புரட்சி வெல்க! இந்திரா காங்கிரசின் அரைபாசிச அடக்குமுறையை முறியடிப்போம்? உலகத்தொழிலாளர்களே ஒன்று சேருங்கள்: உலக கம்யூனிஸ்ட் இயக்க ஒற்றுமை ஓங்குக என்று நீண்டநேரம் முழங்கினர்.

— நமது சிறப்பு நிருபர்

# சமாதான வழிமுறைகளிலேயே பிரச்னைகளை பேசித் தீர்த்துக்கொள்ளுவோம்

## இந்தியா - பாகிஸ்தான் உடன்பாடு

**சிம்லா, ஜூலை. 4— கடந்த ஐந்து நாட்களாக இங்கு இந்திய-பாகிஸ்தான் தலைவர்களிடையே நடந்த பேச்சு வார்த்தை வெற்றிகரமாக முடிந்தது என அறிவிக்கப்பட்டது.**

ஜம்மு-காஷ்மீர் தவிர, பாகிஸ்தான்-இந்திய எல்லையில் உள்ள ஏனைய பிரதேசங்களில் இருதரப்பினரும் டிசம்பர் யுத்தத்துக்கு முன்பு இருந்தஎல்லைகளுக்கு வாபஸ் வாங்கிக் கொள்வது என ஒப்பந்தம் ஏற்பட்டது.

இதன் விளைவாக இந்தியா பிடித்துள்ள பாகிஸ்தான் பிரதேசமான 5139 சதுர மைல் பரப்பிலிருந்து இந்தியா தனது துருப்புக்களை வாபஸ் வாங்கிக் கொள்ளும். இவைபஞ்சாப், கட்ச், சிந்து ஆகிய பாகிஸ்தான் பிரதேசங்களில் உள்ள பகுதிகள்.

அதேசமயத்தில் இந்தியாவின் பஞ்சாப், ராஜஸ்தான் பகுதிகளிலிருந்து தான் முன்னேறிப் பிடித்துள்ள 69 சதுர மைல் பரப்பிலிருந்து தன்னுடைய துருப்புக்களை வாபஸ் வாங்கிக்கொள்ளும்.

### முக்கிய ஷரத்து

இந்தியா-பாகிஸ்தான் ஒப்பந்தத்தில் ஏனைய முக்கியமான ஷரத்துக்கள் பின்வருமாறு:—

தங்களுக்கிடையே யுள்ள கருத்து வேறுபாடுகளை இந்தியா, பாகிஸ்தான் ஆகிய நாடுகளின் அரசுக்கும் பரஸ்பர பேச்சு வார்த்தை மூலம், சமாதான வழிகளில் பரஸ்பரம் இரு நாடுகளின் பேச்சு வார்த்தைகள் மூலம் அல்லது பரஸ்பரம் இருநாடுகளும் ஒப்புக் கொண்டுள்ள வேறு வழி முறைகளில் சமாதான முறையில் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ளும்-

எந்தப் பிரச்னையிலும் இறுதி உடன்பாடு ஏற்படும் வரை இருநாடுகளும், தானகவே இன்றுள்ள நிலைமையை மாற்ற முயற்சி செய்யாது.

இரு நாடுகளுக்கு மிடையே கடைப்பிடிக்க வேண்டிய சமாதான, ஒழுங்கு முறையான உறவுகளுக்குக் குந்தகம் விளைவிக்கக் கூடிய முறையில் எத்தகைய செயல்களுக்கும் ஊக்கமளிக்காது. அப்படிப்பட்ட செயல்கள் உருவாவதை இரு நாடுகளும் தடுக்கும்.

இரு நாடுகளும் ஒரு நாட்டின் அரசியல் சுதந்திரம் அல்லது பிரதேச ஒருமைப்பாட்டுக்கு எதிராக பயமுறுத்தலிலோ பலாத்காரத்தைப் பயன்படுத்துவதிலோ மற்றொரு நாடு ஈடுபடாது.

### வர்த்தக போக்குவரத்து தொடர்பு

இருநாடுகளுக்கிடையேயும் தபால் போக்குவரத்து-தந்திப் போக்குவரத்து, நில மார்க்கங்களிலும் ஆகாய மார்க்கங்களிலும் தொடர்புகள் ஏற்படும்.

இரு நாடுகளுக்கும் இடையே மீண்டும் வர்த்தக, பொருளாதார உறவுகள் ஏற்படுத்திக் கொள்ளப்படும்.

இந்த ஒப்பந்தம் இரு நாடுகளாலும் அங்கீகரிக்கப்படும் நாளிலிருந்து 30 நாட்களுக்குள் இரு நாடுகளின் துருப்புக்களும் ஜம்மு—காஷ்மீர் பிரதேசம் தவிர, ஏனைய பகுதிகளிலிருந்து வாபஸ் வாங்கிக் கொள்ளும்.

யுத்தக் கைதிகளை பரிமாறிக் கொள்வது, ஜம்மு—காஷ்மீர் பகுதிக்கு இறுதித் தீர்வு காண்பது, இரு நாடுகளுக்குமிடையே ராஜ்ய உறவுகளை ஏற்படுத்திக் கொள்வது ஆகிய பிரச்னைகள் குறித்து இந்தியா, பாகிஸ்தான்ஆகிய இருநாடுகளின் தலைவர்கள் 2-வது உச்சகட்ட மாநாடு நடத்தி அதில் முடிவு செய்வர்.

இந்த 2-வது உச்சகட்ட மாநாடு இவ்வாண்டு டிசம்பர் மாதத்தில் நடைபெறும் என பி. பி. சி. செய்தி ஸ்தாபனம் அறிவிக்கிறது.

# காங்கிரஸ் சதி

## ஜனநாயகக் கட்சிகளுக்கு ஒரு எச்சரிக்கை

எதிர்க்கட்சி ஜனநாயக இயக்கம் சம்பந்தமாக இந்திரா காங்கிரஸ் பின்பற்றும் நடைமுறைத் தந்திரம் ஜனநாயக, இடதுசாரிகளைப் பிளவுபடுத்துவதாகும். நம் கட்சியைத் தனிமைப்படுத்த முயற்சிப்பதாகும். பின்னர் அடக்குமுறைமூலம் அதைப் பணிய வைப்பதாகும்.

ஆளும் காங்கிரசின் அரசியல் நடைமுறை தந்திரங்களின் சாராம்சம், ஜனநாயக சக்திகளையும், இச்சக்தி உள்ளடக்கியிருக்கும் ஐக்கிய முன்னணியையும் தாக்குவதேயாகும் என்று 8-வது காங்கிரசில் இயற்றப்பட்ட தீர்மானம் சுட்டிக்காட்டியுள்ளது. அந்தச் சமயத்தில் காங்கிரசின் பிளவுபடுத்தும் நடைமுறை தந்திரங்களைப் பற்றி அந்தத்தீர்மானம் வலியுறுத்திக் கூறவில்லை. புதிய அடக்குமுறைத் தாண்டவத்தைப் பற்றி குறிப்பிடவேண்டிய அவசியமும் எழவில்லை. சென்ற கட்சிக் காங்கிரசுக்குப்பின் பிரதானமான முறையில் இந்த இரு அம்சங்களும் எழுந்துள்ளன.

ஜனநாயக சக்திகளைச் சீர்குலைப்பதற்காக இந்திரா காங்கிரஸ் தன்னுடைய பிரச்சார சாதனத்தைக் கொண்டும், மத்தியிலுள்ள தனது அதிகாரத்தைக் கொண்டும், பங்களா காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் கட்சி போன்ற கட்சிகளின் துரோகத்தைக் கொண்டும் மேற்கு வங்கத்தின் ஐ. மு. அரசாங்கத்தைக் கவிழ்ப்பதில் வெற்றி பெற்றது.

கேரளத்தில் நயவஞ்சகத் திருத்தல்வாதிகள் ஆர். எஸ். பி., முஸ்லிம்லீக் மற்றகட்சிகளின் உதவியைக் கொண்டும் அமைச்சரவையைக் கவிழ்ப்பதில் காக்கிரஸ் வெற்றிபெற்றது. இந்த சந்தர்ப்பவாதக்கட்சிகளுடன் தேர்தல் கூட்டுச் சேர்ந்து நம் கட்சிக்கு எதிராக தங்களுடைய கூட்டணிக்கு மெஜாரிட்டி பெற்றது. காங்கிரசுக்கு எதிரான ஐக்கிய முன்னணி மாற்றப்பட்டு, காங்கிரஸ், வலது கம்யூனிஸ்டுகள், அவர்களுடைய கூட்டாளிகளின் மார்க்சிஸ்ட் எதிர்ப்பு முன்னணி கொண்டுவரப்பட்டது. நம் கட்சியின் தலைமையிலிருந்த இந்த அரசாங்கங்கள் மக்கள்போராட்டங்கள் வளர்க்கும் அமைப்புகளாக செயல்பட உறுதிபூண்டிருந்தன. மக்களுக்கு அதிகம் தேவையுறும் நிவாரணம் அளிப்பதற்கான கருவிகளாகச் செயல்பட உறுதிபூண்டிருந்தன. ஜனநாயக எதிர்க் கட்சிகளை பலப்படுத்தவும் உறுதிபூண்டிருந்தன. இவற்றை பெரும் அபாயமாக ஆளும்வர்க்கங்கள் பார்த்தன; ஆகவே இவற்றின் மீது மீண்டும் மீண்டும்தாக்குதல் வந்தது.

மேற்கு வங்கத்தில் பழைய பாணியில், முதலில் வலது கம்யூனிஸ்டுகளையும் மற்ற கூட்டணிகளையும் பிரச்சார சாதனங்களாகப் பயன்படுத்தி நம் கட்சிக்கு எதிராக அவதூறுப் பிரசாரம் தொடங்கப்பட்டது. இந்தக்கட்சிகளின் துரோகத்தால் இரண்டாவது ஐ மு. அமைச்சரவை கவிழ்ந்தது. 1971 தேர்தலில் காங்கிரஸ் மீண்டும் வருவதற்கு முயற்சி செய்தது.

கேரளத்தைப் போலன்றி மேற்கு வங்கத்தில் 1971-ம் ஆண்டு தேர்தல், கொலைத் தாக்குதல்களுக்கு மத்தியிலும், விரிந்த அளவிலான பயங்கர அடக்குமுறை தாண்டவத்துக்கு மத்தியிலும், சி. ஆர். பி. தாக்குதங்களுக்கும் மத்தியிலும் நடத்தப்பட்டது சில தொகுதிகளில் சில இடங்களுக்குப் போகவே முடியவில்லை என்ருலும் கேரளத்தைப் போலன்றி ஐ. மு. விலிருந்து ஓடியவர்களிடையே சில இரகசிய உடன்பாடுகளும் தொகுதி உடன்பாடுகளும் இருந்தாலும், மாற்று முன்னணியை ஏற்படுத்த முடியவில்லை. அடக்குமுறைத் தாண்டவம் இருந்தபோதிலும் காங்கிரஸ் மெஜாரிடி பெற முடியவில்லை. மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி 115 இடங்கள் பெற்று தனிப் பெரும் கட்சியாக வந்தது.

பின்னர் காங்கிரஸ், வலது கம்யூனிஸ்ட் கட்சி, பார்வர்டு பிளாக், முஸ்லிம் லீக், சிண்டிகேட், ஜனசங்கம் மற்றவர்கள் ஆதரவுடன் அமைச்சரவை அமைத்தது. ஆனல் நம் கட்சியின் தலைமையில் வளர்ந்து வரும் வெகுஜனப் போராட்டங்களின் முன்னிலையிலும் சட்டமன்றத்தின் நம் பலத்தின் முன்னிலையிலும், அரசாங்கத்தை அது நடத்த முடியவில்லை. காங்கிரசின் மக்கள் விரோதக்கொள்கைகளை எதிர்த்துப் போராடுவதற்கு சட்டமன்ற அரசாங்கத்தை நம் கட்சி பயன்படுத்துவதைக்கண்டுஅஞ்சி, பிரதான எதிர்க் கட்சியான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு அமைச்சரவை அமைக்க ஒரு வாய்ப்புக் கொடுக்காமலே அது சட்டமன்றத்தைக் கலைத்தது.

கேரளத்திலும் மேற்கு வங்கத்திலும் நம்முடைய சொந்த பலத்தின் அடிப்படையில் காங்கிரசின்நடைமுறை தந்திரங்களை நாம் சந்திக்க முடிந்தது. என்ருலும் காங்கிரசுக்கு எதிரான ஐக்கிய முன்னணி சீர்குலைக்கப்பட்டது. ஜனநாயக இயக்கத்துக்கு பெரிய அடியாகும். அது காங்கிரசுக்கு எதிராக மக்களைத் திரட்டும் நம் பணியை முன்னைவிட கடினமாக்கியுள்ளது. இவ்வாறு செய்ய வேண்டும் என்பதற்கே ஐ. மு. சீர்குலைக்கப்பட்டது. ஐக்கிய முன்னணியை உடைத்தால் நம் கட்சியைத் தனியாக கடுமையான அடக்குமுறைக்குப் பலியாக்க முடியும் என்பதே இதன் மையமான கருத்தாகும்.

நம் சக்திகள் பலவீனமாக இருந்த மற்ற மாநிலங்களில் காங்கிரசின் தீவிரவாதத் தோற்றமும், ஐ. முக்கள் கலைப்பும் வங்கம் சம்பந்தமான அவதூறுப் பிரச்சாரமும் காங்கிரசுக்கு பெரிய லாபங்கள் கிட்ட உதவியது. இடதுசாரி இயக்கத்தைச் சீர்குலைக்க உதவிற்று

ஆளும் கட்சியின் நடைமுறைத் தந்திரத்தின் மையமான கருத்து இடதுசாரி ஜனநாயக சக்திகளை பிளவுபடுத்தி நம் கட்சியை தனிமைப்படுத்த வேண்டும் என்பதேயாகும். ஜனநாய இயக்கத்தைச் சீர்குலைத்துத் தாக்க வேண்டும் என்பதேயாகும். ஆளும் கட்சியின் இந்த முயற்சியை எதிர்த்து முறியடிப்பதையும் இடதுசாரி, ஜனநாயகசக்திகளின் ஒற்றுமைக்கு ஸ்திரமாக உழைப்பதையும் பொருத்துமே' இதுசாரி இயக்கத்தின் துரிதமான அல்லது மெதுவான முன்னேற்றம்அமையும்; இல்லையெனில்சிக்குண்டு போகும். இந்திரா காங்கிரசுக்கு எதிராக இடதுசாரி ஜனநாயக சக்திகளின் ஒற்றுமையைக் காட்டுவதுஒன்றேஇதற்குப் பதில் நடவடிக்கையாக இருக்க முடியும்.

நமக்குப் பணித்துள்ளசரித்திரக் கட்டளையாக இது விளங்குகிறது.

அதனுல்தான், நமது கட்சியானது, பொதுஜனப் போராட்டங்களையும், பொதுஜன இயக்கத்தையும் ஒன்று திரட்டும் தனது பாத்திரத்தை விட்டுக்கொடுத்து விடாமல், ஐக்கியமுன்னணி அரசுகளைப் பாதுகாக்கவும் வேலை செய்யவும் தொடர்ந்து உறுதியாகப் பாடுபட்டது அதனுல்தான், நமதுகட்சியானது, பொதுமக்களுக்கு உடனடி நிவாரணம் அளித்திட, கடும் முயற்சிகளை மேற்கொண்டது. அதே சமயத்தில் அரசியல் சட்டத்தின் வரம்புகளையும் அதன் ஷரத்துக்களையும் பற்றி பொதுமக்களிடம் அம்பலப்படுத்தினேம். அதனுல்தான், நாம் மந்திரிசபையில் இருக்கின்ற போதே, பொதுஜனப் போராட்டங்களுக்கு பகிரங்கமாகவே ஊக்கமளித்ததோடு அப்போராட்டங்களுக்கு முழுப் பாதுகாப்பு கொடுத்தோம்.

—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மதுரை மாநாட்டின் அரசியல் தீர்மானத்திலிருந்து."

# கூடலூர் படுகை காட்டு விவசாயிகளுக்கு எதிராக போலீஸ் தலையீடு

கூடலூர், ஜூலை. 3— கூடலூர் படுகைக் காட்டில் 50 விவசாயிகள் பருத்தியும், 25 ஏக்கர் நிலத்தில் எள்ளுப் பயிர் செய்துள்ளனர். மீதமுள்ள நிலத்தில் ஒரு பகுதி சாமை விதைக்கப்பட்டுள்ளது. பாக்கியுள்ள நிலத்தில் விவசாய வேலைகளைச் செய்ய விடாமல் போலீஸ் தடுத்துள்ளது.

இந்த நிலத்தில் சாகுபடி செய்துள்ள பயிர்களையும், நிலத்தையும் உத்தமபாளையம் தாசில்தார் மே 30ம் தேதி பார்வையிட்டுள்ளார்

### காட்டிலாகா தொல்லை

பெரியகுளம் ஆர். டி. ஓ. ஜூலை 9ம் தேதி நிலத்தையும், அதில் பயிர் செய்துள்ள பொருள்களையும் பார்வையிட்டுள்ளார். விவசாயிகளுக்கு பட்டா வழங்க கலெக்டருக்கு ஆர். டி. ஓ. சிபாரிசு செய்திருப்பதாக தெரிகிறது. இந்தியாவில் நிலம் பாரஸ்ட்டு எல்கைக்குட்பட்டதென்று கூறி பல்வேறு இடையூறுகள் செய்யப்படுகின்றன.

நிலத்திலிருந்து ஏழை விவசாயிகளையும் நிர்ப்பந்தமாக வெளியேற்ற வேண்டுமென்பதற்காகப் பொய்யான குற்றச்சாட்டுக்களை கூறி போலீசில் புகார் செய்யப்பட்டிருப்பதாகவும் தெரிய வருகிறது.

கூடலூரிலுள்ள பாரஸ்ட் ரேஞ்சர், பாரஸ்ட்டர், சில கார்டு வாட்சர்கள் ஆகியோர் சில்லறை நபர்கள் சிலரை வைத்துக் கொண்டு பாரஸ்ட் இலாகாவிற்கு வீண் நஷ்டங்களை ஏற்படுத்திக்கொண்டு வருகிருர்கள். அதை மறைப்பதற்கு ஏழை விவசாயிகள் மேல் பொய்யான குற்றச் சாட்டுகளைக் கூறிக்கொண்டு வருகிருர்கள்.

### சொக்கலிங்கம் கண்டனம்

படுகைக்காடு விவசாயிகள் சாகுபடி செய்திருக்கும் மகசூல் பருத்தி, சாமை, எள்ளு போன்ற பொருட்கள் சேதப்படாமல் கிடைப்பதற்கும், மற்றும் உணவுப் பொருட்கள் விதைப்பதற்கு இடையூருக போலீஸ் தடுத்துவைத்துள்ளது அகனல் ஏற்படும் நஷ்டங்களை ஏழை விவசாயிகளால் தாங்கிக்கொள்ள முடியாத நிலைமையாக உள்ளது.

இதுவிஷயமாய் உடனடியாக நடவடிக்கை எடுத்து ஏழை விவசாயிகள் குடும்பத்திற்கும் எவ்விதப் பொருள்கள் நஷ்டமும் பொய் வழக்கும் ஏற்படாத படி பாதுகாத்து கீழ்க்கண்ட கோரிக்கைகளுக்கு ஆவன செய்ய வேண்டுமாய் கேட்டுக்கொண்டு, பெரியகுளம் உத்தமபாளையம் விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் வி. சொக்கலிங்கம் விடுத்துள்ள அறிக்கையில் கீழ்க்கண்ட கோரிக்கைகளை வலியுறுத்தியுள்ளார்.

### பட்டா வழங்குக

படுகைக்காடு 95 ஏக்கர் நிலத்தை 50 விவசாயிகளுக்குப் பட்டா போட்டு கொடுக்க வேண்டும்.

விவசாய வேலை செய்வதை தடுத்துள்ள போலீஸ் நடவடிக்கையை நிறுத்த வேண்டும்.

மோசடியாக ஏலம் விடப்பட்டதாக இருப்பதை ரத்துச் செய்யவேண்டும்.

ஏழை விவசாயிகள் மேல் பொய் வழக்குப்போட எண்ணும் முயற்சி நிறுத்தப் படவேண்டும்.

பாரஸ்ட் இலாகாவிற்கு நஷ்டம் உண்டு பண்ணும் ரேஞ்சர், பாராஸ்ட்டர் முதல் வாட்சர்கள் வரை உள்ளவர்கள் மேல் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டும்.

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே முத்தையா